உ

பரமபதி துணை.



பரமசிவன் பார்வதிக்கு

உபதேசித்த

# மறைக்குறி சாஸ்திரம்

மூலமும்-உரையும்

பதிப்பகம்:

விவேகாநந்தா பிரஸ்

மதுரை.

உ

பரமபதி துணை.

பரமசிவன் பார்வதிக்குபதேசித்த

# மழைக்குறி சாஸ்திரம்

மதுரை சோதிடம்

த. குப்புசாமி நாயுடு

அவர்களால்

ஏட்டுப் பிரதிகளிலிருந்து தொகுத்து

உரை எழுதப்பெற்று

மதுரை

விவேகாநந்தா பிரஸில் பதிப்பித்து

வெளியிடப்பெற்றது.

 [இதன் விலை அணா 10.

உ

பரமபதி துணை.

# நூன்முகம்

உலகின் கண் ணுற்பவித்த ஜீவாதாரத்திற்கு முதற் கருவியாகயிருக்கின்றது தண்ணீரேயாம். அத்தண்ணீரானது, ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற சப்த மேகங்களும் சமுத்திரத்திற் சென்று அதிலுள்ள நீரைப் பருகிச் சூற்கொண்டு விண்ணிற்பறந்து பூமியிற் படியும்படியாகப் பெய்கின்ற மழையினால் உண்டாகின்றதென்பதை யாவர்களும் உணர்ந்ததேயாம்.

அவ்விதம் பெய்வதினாலுண்டாகியத் தண்ணீரினால் விவசாயஞ் செய்யக்கூடிய கங்காகுல சிகாமணிகள் தங்கள் நிலங்களைப் பண்படுத்தி மாந்தர்களுண்ணும் உணவுக்குரிய நெல் முதலாகிய தானியவிதைகளை விதைத்துத் தண்ணீர் பாய்ச்சியும் அதிலுண்டாகும் களை முதலியக் குற்றங்களை நீக்கிப் பயிர் விளைந்து அதன் பலன்களைத் தரக்கூடிய பக்குவங்களை காலாகாலமறிந்து செய்து வருவதினாலும், அப்பயிர்கள் விளைந்து அதன் பலன்களை அநேகம் பங்கதிகமாகக் கொடுக்கின்றன.

அதனைப் புவியிலுள்ள புனிதர்களேற்று உண்டிக்கேற்ப அறுசுவை பொருந்தும்படியாகச் சமைத்துப் பொசித்துத் திடகாத்திர தேகர்களாக ஆரோக்கியத்துடன் வாழ்கின்றார்களென்பதை நாமேயறிந்துள்ளோம்.

இவ்வித மழை பெய்யும்படியான கால நிதானங்களை யறிந்து அக்காலங்களில் விதை விதைக்கில் முக்கியமான தக்க பலன்களைத் தருமென்பதை யுணர்ந்த பராசத்தியானவள் தனது நாயகனாகிய பரமேச்சுரனைப் பணிந்து பூவிலுதித்த புண்ணிய சீலர்களாகிய மாந்தர்கள், இலகுவாகத் தெரிந்துகொள்ளக் கூடிய சாஸ்திரமொன்றிருக்குமானால், அதனை எனக்கு போதித்தருள வேண்டுமென்று கேட்டுக்கொண்டதின்பேரில் உமாநாதனாகிய பரமேச்சுரன் பரமேச்சுரிக்குபதேசித்த சாஸ்திரமானது ஒருங்கின்றி ஆங்காங்கு சிதையுற்றிருந்ததை என்னால் ஒருங்கு சேர்த்தெழுதியதை இந்நாள் மதுரை விவேகாநந்தா பிரஸில், அச்சிட்டு வெளிவந்திருப்பதால், தாங்களெவ்வொருவரும் தங்கள் தங்கள் கரங்களிலேற்று இச்சாஸ்திரத்தை நன்குணர்ந்து பயிர்கள் விளையும்படியான மழைபெய்யுங் காலக்குறிப்புகளைத் தெரிந்து உச்சீவிக்கும்பொருட்டு எல்லாம் வல்லத்தண்ணருட்கருணா முகூர்த்தமாய் விளங்கும் பரமேச்சுரன் திருவருட் புரிவாராக.

இங்ஙனம், தங்களன்புள்ள

த. குப்புசாமி நாயுடு,

மதுரை.

உ

பரமபதி துணை.



கயிலையங்கிரியில்

**பார்வதி பரமசிவன்**

எழுந்தருளும் காக்ஷி.



உ

பரமபதி துணை.

# பரமசிவன் பார்வதிக்குபதேசித்த

# மழைக்குறி சாஸ்திரம்

நூல்.

ஓமெனுங் கயிலைதன்னி லுமையுட னீசன் றானும்
பூமலிந்திடுநற் சோலை புக்கிவீற் றிருக்க மேகந்
தாமவர் முன்பு கூடச் சத்திதற் பரனைப் போற்றி
மாமழை பெய்யுங் கால வகைகண்டு செப்பு தற்கே.

(இதன் பொருள்) உண்மைப்பொருளாகிய பிரணவமே தொனித்துக்கொண்டிருக்கின்ற கயிலையங்கிரியிற் சிறப்புற்றோங்கப் புட்பித்திருக்கும், நந்தன வனத்திற்சென்று பார்வதியும் பரமசிவனும் ஏகாந்தமாக உன்னததானத்திலிருக்குஞ் சமயத்தில் தங்களுக்கு முன்பாக ஆகாயத்திற் சேர்ந்திருக்கின்ற மேகத்தைக்கண்ட உமாபிராட்டியார் திருவுளத்தில் ஓர்! நினைவுண்டாகி பரமேச்சுரன் பாதத்திற் பணிந்து உலகிற்காதாரமாய் விளங்குகின்றது. இம்மேகத்தினாற் பெய்யக்கூடிய மழையினால் அல்லவா? ஆதலால்! அம்மழை பெய்யும்படியான கால நிதானங்களையறிந்து சொல்லுதற்கே என்றவாறு. (1)

செப்பிடு நூலுண் டாகிற் றெரிந்திட நினது சிந்தை
ஒப்பியே யெனக்குத் தானு முரைத்தருள் புரிவீ ரென்ன
இப்புவி நவக்கோட் சாரத் தியல்புள நூலொன் றுண்டு
தப்பிலாச் சாத்தி ரத்தைச் சாற்றிடக் கேளென் றூரே.

(இ-ள்) அவ்விதம் பவ்வியமாகச் சொல்லுஞ் சாத்திரமிருக்குமானால் அதனைத் திருவுளமோர்ந்து அடியாள் தெரிந்துகொள்ளும்

வண்ணம் உரைத்தருள்புரிவீரென்று பிரார்த்திக்க ஈசனும் ஈஸ்பரியைப்பார்த்து ஓ! பெண்கள் நாயகமே இப்பூவுலகின்கண் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது என்னும் ஒன்பது கிரகங்களின் சஞ்சாரத்தாலேற்படக்கூடிய மழைக்குறிப்பின் கால நியமங்களைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு ஒப்பற்றதும் குற்றமற்றதுமான சாத்திரமொன் றுண்டு அதனை யுனக்கு யான் சொல்லக் கேட்பாயாக எ-று. (2)

கேட்டிடு புதனுஞ் சுங்கன் கிட்டியோர் பதத் திருக்க
நாட்டினில் மழையும் பெய்யும் நற்பயிர் விளைவு காணும்
கேட்டினை யோட்டி வைக்குங் கேணி நீ ரூற்று முண்டாம்
தாட்டிகச் செந்நெல்கன்னல் தான்மிகச் செழிக்கும்பாரே.

(இ-ள்) புதனுஞ் சுக்கிரனும் ஒரு நட்சத்திர பாதத்திலிருப்பாராகில் உலகத்தில் மழைபெய்து ஒன்பது தானியங்களுஞ் செம்மையாய் விளைந்து கெடுதலை விடுதலை செய்து ஏரி, குளங் கிணற்றில் நீர் நிறைந்தும் வல்லமையுற்ற நெல்லுஞ் சுவையிற் சிறந்த கரும்புஞ் செழித்தோங்கி வளர்ந்திருக்கும் எ-று. (3)

பார்த்திடப் புதனு மேற்கிற்பகர்ந்திடும்வேள்விபொய்கை
நேர்த்தியா மைமீன் கன்னி நீள்சுடர் சுளகு பெண்ணை
கீர்த்தியாங் கீடந் தன்னிற் கிட்டி நின் றுதய மாகில்
பூர்த்தியாய் மழையும் பெய்து பூமியுஞ் செழிக்குந்தானே.

(இ-ள்) மகம், பூராடம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுசம், கேட்டை இந்த எட்டு நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது புதனனவன் மேற்கு திக்கில் உதயமானால் பூமியில் பூரணமான மழை தாராளமாகப் பெய்து நாடெங்குஞ் செழித்திருக்கும் எ-று. (4)

தானெலி கலப்பை வாவி தக்கதோ ராடை யங்கை
ஊனமா மொற்றைக் கண்ணன் உதயமோ டுற்ற வஸ்த
மானம தாகி லிந்த மண்டலத் தரசர் கட்கும்
ஞானக மேயுங் காலி கன்றுக்கும் பீடை யாமே.

(இ-ள்) பூரம், மகம், உத்திரம், சித்திரை, அஸ்தம் இந்த ஐந்து நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது முக்கிய மழைக் கோளாகிய சுக்கிரனானவன் உதயமானாலும், அல்லது அஸ்தமன மானாலும் பூமியைப் பரிபாலனஞ் செய்யும் அரசர்களுக்கும் காடு மேடுகளில் மேயும் பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் பீடையுண்டா கும் எ-று. (5)

ஆகுமே வெய்யோன் புந்தி யருங்கவிக் கூடே செல்ல
வாகுள கேணி கண்வாய் வாவியும் வாரி வற்றும்
மாகுலம் வெம்பி வாடும் மன்னவர் மற்றோர் தாமும்
தாகத்தால் நாவ ரண்டு தயங்கிடு வாரென் றோதே.

(இ-ள்) பாரிற் சிறந்த காரியின் றந்தை வீரியமுற்ற சூரியனானவன் இணக்கமான கணக்கனென்னும் புதனுக்கும் பாரிக்கும் மாரிக்கும் அதிபதியாகிய சுக்கிரனுக்கும் நடுவிற் செல்ல கிணறு, கண்வாய், சமுத்திரம் வற்றிப்போகும். அதனால் பசுக்கூட்டங்களும், குதிரைகளும்ஆடுகளும், வேந்தர்களும், மாந்தர்களும் தண்ணீர் தாகத்தால் நாவுலர்ந்து வருத்தப்படுவார்கள் எ-று. (6)

ஓதவே யார லோடு உற்றதோ ரடுப்பு மாவில்
நீதமாங் கவியும் புந்தி நின்றிடின் மழையும் பெய்து
பூதலஞ் செழிக்கு மெங்கும் புரவலர் செங்கோ லோங்கும்
காதல ரொத்து வாழ்வர் கனதன மிகவுண் டாமே.

(இ-ள்) சொல்லும்படியான கார்த்திகை, பரணி, அசுவனி, இந்த மூன்று நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது புவி புகழும் கவியாகிய சுக்கிரனும், கல்வியில் மிக்க வல்லமையுடைய புதனும் ஒன்றாகக் கூடியிருக்க மாரியும் பாரிற் பெய்து பூமியெங்குஞ் செழிக்கவும் மனுநெறி தவறா மன்னர்கள் தன்னகர் தன்னை செங்கோல் நடாத்தவும் சதிபதிகளிருவரும் மனமொத்து பெருமையுஞ் செல்வமும் மிகவுண்டாகி வாழ்வார்கள் எ-று. (7)

உண்டா முருளை யிந்திரனோ டோங்குஞ் செங்கை யிந்நாளில்
பண்டாம் புந்தி சல்லியனும் பாங்கா யொன்றி லடுத்திருக்க
வண்டார் கூந்த லொண்டொடியே வையந் தன்னில் மாரியுறுத்
திண்டா டிடுவர் மானிடவர் செய்யும் பயிரும் விளையாதே.

(இ-ள்) உடுபதி உலவும் உரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை இந்த மூன்று நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்தி லாவது புதனும் சுக்கிரனும் இருப்பார்களாகில் வண்டுகள் மொய்க் கும் பூச்செண்டுகளைக் கொண்டையிற்சூடு மொண்டொடியாகிய பெண்ணே! மண்டலமதனில் கொண்டல் பெய்யாக் குறைவினால் மாந்தர்கள் கட்டமடைந்து நட்ட பயிர் விளையா எ-று. (8)

விளையா ததிதி காற்குளமு மேவும் புயங்க மிந்நாளில்
வளைய வருணன் காப்பியனும் வந்தே யிருக்க மாரியற்பம்
இளையா மாந்த ரிளைத்திடுவ ரெங்கும் பயிர்கள் மத்திபமாம்
களையாச் செட்டு நட்டமுறுங் கவலைபெரிதாமுலகோர்க்கே

(இ-ள்) புனர்பூசம், பூசம் ஆயிலியம் இந்த மூன்று நட்சத் திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது புதனும் சுக்கிரனு மிருப்பார் களானால் மழை சொற்பமாகப் பெய்யும் இதனால் மெலியாத மனி தர்கள் மெலிவார்கள் நாடெங்கும் விளைவு நடுவு நிலமையாம். குறை யா வர்த்தகமுங் குறையும் அதினால் உலகிலுள்ளவர்களுக்கு விசன மதிகமா யிருக்கும் எ-று. (9)

உலகிற் கலப்பை நாவிதனு மோங்கும் வாவி யுத்தமனும்
இலகுங் கன்னி நொய்மீனு மேற்ற மரக்கால் வைகாசி
நலமாந் தாளி வல்லாரை நாடு மிதனில் மதிமகனும்
பலமாம் பிருகுந்தானிருக்கிற்பாரில்வெள்ளம்பெருகிடுமே

(இ-ள்) மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுசம், கேட்டை இந்த ஒன்பது நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது அன்புறத் தெம்பாய் புதனுஞ் சுக்கிரனும் பொருந்தியிருக்க நதிகளிற் சலப்பிரவாக மதிகமாம் எ-று. (10)

பெருகிடு மானி பொய்கை பிறங்கிடுங் கூவல் மாயன்
தருகிடுங் காக்கை சுண்டன் சாற்றிடும் புரட்டைதன்னில்
அருகுற வொள்ளி யோனு மறிஞனுஞ் சேர்வா னாகில்
கருகிடும் பயிர்க ளெல்லாங் கனமழை பெய்யா தென்னே.

(இ-ள்) மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி இந்த ஏழு நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது சுக்கிரனும் புதனுஞ் சேர்ந்திருக்கில் மழை பெய்யாததினால் பயிர்களெல்லாங் காய்ந்து விடும் எ-று. (11)

என்னநல் வேந்தன் ஞேணி இசைபுகர் கணக்க னிற்கில்
தன்னமா மங்கங் குற்ற சதிமிகுங் கசட ருக்குள்
பின்னமாம் பகையு மாகிப் பிரபல வரசர் பக்கம்
இன்னலாம் வழக்கு ரைத்து மிருநிதி யிழப்பா ரன்றே.

(இ-ள்) உத்திரட்டாதி, ரேவதி இந்த இரண்டு நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது சுக்கிரனும் புதனுஞ் சேர்ந்திருக்கில் சிறுமையாக பற்பல இடங்களில் சதா வஞ்சனையோடுங் கூடிய கீழ்மக்களுக்குள் வேற்றுமையாகிய பகைகளுண்டாகி அரசன் முன்சென்று தன்பங்களைத் தரத்தக்க வாதுகளை யுரைத்து தங்களுக்குள்ள ஆஸ்திகளையெல்லாம் தோற்றுவிடுவார்கள் எ-று. (12)

அன்றும் பொன்னு முதயத்தி லஸ்த மனத்திற் காப்பியனும்
குன்றாக் குசனு மோரோரை குறித்தங் கேகுஞ் சமயத்தும்
நன்றாங் காரி வக்கிரத்தும் நாட்டில் நல்ல மழைபெய்யும்
என்றுங் குற்ற பயிர்விளைவ தேற்றமுண்டா மெனச் சொல்லே.

(இ-ள்) வியாழன் உதயமாகும்போதும் சுக்கிரன் அஸ்தமனமாகும்போதும் செவ்வாய் ஒரு ராசியிலிருந்து மற்றொரு ராசிக்குப் போகும்போதும் சனி வக்கரிக்கும்போதும் கழனியில் விதைத்த பயிர்கள் செழித்தோங்கி விளையும்படியான நல்ல மழை பெய்யும் எ-று. (13)

சொல்லுஞ் சுங்க னுதயத்துஞ் சுரரின் குருவு மஸ்தமனம்
வல்ல மாலு முதயாஸ்த மானந் தனிலு மாரிமிகும்
அல்லே நிகர்த்த மலர்க்கூந்த லணங்கே காரிகுசன்றானும்
செல்ல வுதய வஸ்தமனந் திகழ மேகம் பெய்யாதே.

(இ-ள்) சொல்லுதற்கரிய வல்லமை பொருந்திய சுக்கிரன் உதயமாகும்போதும் வியாழன் அஸ்தமனமாகும்போதும் புதன் உதயமாகும்போதும் அஸ்தமனமாகும்போதும் மழை யதிகமாகப் பெய்யும். இருட்டிலு மிருட்டாகிய கறுப்பு நிறம்போன்ற அளக பந்தியில் புட்பஞ்சூடிய பொற்கொடியே சனியுஞ் செவ்வாயுந் தனித் தனியே உதயமாகும்போதும் அஸ்தமனமாகும்போதும் மழை பெய்யா எ-று. (14)

பெய்யு மேகஞ் சலராசிப் பிறங்கமதியு மவன் றனக்கு
உய்ய வைந்தே ழொன்பதனி லோங்குங் காரி சுங்கனுற
செய்யச் சேய்க்கு வம்புலியுந் தெற்கே யுதிக்கி லுதகமிலை
துய்ய கவிக்குத் தெற்குமதி தோன்ற மாதர்க் காகாதே.

(இ-ள்) சலராசியாகிய கடகம், மகரம், கும்பம், மீனம் இந்த நான்குராசியிற் சந்திரனிருக்கஅச் சந்திரனுக்கு 5, 7, 8, 9-ல் சுக்கிரனும் சனியும் இருப்பார்களாகில் அதிக மழை பெய்து தேசம் சேமத்தை யடையும். சந்திரனனவன் செவ்வா யிருப்பதற்கு தெற்குப்பக்கத்தில் உதயமாகில் மழை பெய்யாது. சுக்கிரனுக்குத் தெற்கு திக்கில் சந்திரனனவன் உதயமாகில் பெண்களுக்குப் பீடை யுண்டாம் எ-று. (15)

மாதவக் கவிக்குஞ் சேய்க்கு மதிவடக் குதய மாகில்
பூதலத் தெங்கு மேகம் பொருந்திநன் மாரி பெய்து
சீதளப் பயிர்க ளோங்கிச் செந்நெலும் பொலிவு காணும்
மாதரும் புருடர் மக்கள் வாழ்வுபெற் றிருப்பர் தாமே.

(இ-ள்) சுக்கிரனுக்கும், செவ்வாய்க்கும் சந்திரனனவன் வடக்குத் திக்கி லுதயமானல் பூமியெங்குஞ் செழிக்கும்படியாக பூரண

மான மழைபெய்து வயல்களில் நட்ட பயிர்கள் உயரமாக வளர்ந்து ஒட்டிக்கிரட்டியாக விளைந்தும் பெண்களும் புருடர்களும் தங்கள் புதல்வர்களுடன் மிகவும் உன்னதமாகிய நன்னடையுடன் சுகம் பெற்று வாழ்ந்திருப்பார்கள் எ-று. (16)

இருந்திடப் பூமன் வக்ர மியம்புநா ளறுபா னைந்தும்
பொருந்தசொட் சேத்திரத்தும் பூரத்தின்முதற்பாதத்தும்
திருந்தவந் திருக்கு மந்தத் தினம்வரை மாரி யின்றி
வருந்தத்தீப் பொறி பறக்கும் வாரியும் வற்றிப் போமே.

(இ-ள்) செவ்வாயானவன் வக்கிரகதியாய் எத்தனை நாள் இருக்கின்றானோ அத்தனைநாள் வரைக்கும் சொந்த வீடாகிய மேட விராசியிலும் விருட்சிக விராசியிலும் எத்தனைநாள் இருக்கின்றானோ அத்தனை நாள் வரைக்கும் பூச நட்சத்திரம் முதற் பாதத்தில் எத்தனை நாள் இருக்கின்றானோ அத்தனை நாள் வரைக்கும் மழையின்றி விளைவுகுன்றி அகங் குலைந்து மிகமெலிந்து அனற்பொறி சிதற கனைகடற் சுவற வருத்தமுறுவார்கள் எ-று. (17)

போகவா காயந் தன்னிற் புயல்நிற மிந்த்ர நீல
மாகவே யிருக்கு மட்டு மாதவர்க் கற்பர் செய்யும்
பாகமாந் தானம் போலப் பாரினிற் றூற லாகுந்
தாகமாம் பொருளுஞ் சேதந் தாரணி யோர்க்குண் டாமே.

(இ-ள்) ஆகாயத்தில் வாகாயுதிக்கும் மேகங்கள் இந்திரநீல வருணத்தோடுங் கூடி எத்தனைநாள் இருக்கின்றதோ அத்தனை நாள் வரைக்கும் தன்னையுணர்ந்த தபோதனர்க்கு கீழ்மக்கள் அன்ன மிட்டவாறு சொற்பத் தூற்றலாகத் தூறும் அதனால் ஆசைமேலிட்டிருக்கும் மாசற்ற காசுகளை காசினியுள்ளோர் மோசமாகச் செலவு செய்வார்கள் எ-று. (18)

உண்டாஞ் சகடு கொடுநுகமு மோங்குங் கதிர்நா ளைமீனும்
பண்டாங் கன்னி கோனகமும் பகருஞ் சுளகு கடைக்குளமும்
தண்டா முரசா மித்தினத்திற் சார்ந்து சேய னிருக்கும்வரை
அண்டா தாலி பெய்யாம லதிக நலிவா மகிலத்தே.

(இ-ள்) உரோகணி, மகம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், உத்திராடம், உத்திரட்டாதி இந்த ஒன்பது நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது செவ்வாயானவன் இருக்கும் நாள்வரை மழை பெய்யாது அக்காலத்தில் தக்கோர் மிக்க வருத்த முறுவார்கள் எ-று. (19)

அத்தா திரையோ டாவணமு மரிய வண்டு கட்செவியில்
முத்தாங் குசனு மிருந்திடுநாள் முழுதும் பெரிய காற்றடிக்க
வத்தாக் கேணி தடாகமெலாம் வத்து மதனு லருந்துதற்கு
பத்தாப் புனலால் மிகமெலிந்து பதிவிட் டயலூ ரேகுவரே.

(இ-ள்) திருவாதிரை, புநர்பூசம், ஆயிலியம் இந்த நான்கு நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது செவ்வாயானவன் பவ்வியமாகத் தங்கி யிருக்கின்றானோ அந்நாள்வரை மழை பெய்யாமல் அதிகமாகக் காற்றடிக்கும் அதனால் வற்றாத கிணறு குளம் முதலியவை தண்ணீர் வற்றி மண்ணில் மாந்தர் குடிப்பதற்கு சலமற்று மெலிவடைந்து அயலூர் செல்வார்கள் எ-று. (20)

ஏகச் சண்ட னேரில்லமிருந்தோ ரில்லஞ் செலும்போது
பாக மதியு மஸ்தமனம் பகருங் கோண கேந்திரத்தில்
வாக தாகத் தானிருக்க வலது கவியோ டெங்குறினும்
யூக மறையோன் பார்த்திடினு முலகில் மாரி பெய்திடுமே.

(இ-ள்) சூரியனானவன் ஒரு ராசியிலிருந்து மற்றொரு ராசியிற் பிரவேசிக்குங் காலத்தில் சந்திரனானவன் அஸ்தமனமாயாவது அல்லது கேந்திர ஸ்தானமாகிய 1, 4, 7, 10-லிருந்தாலும் அவ்விதமன்றி திரிகோணஸ்தானமாகிய 5, 9-லிருந்தாலும் அஃதன்றி சுக்கிரனுடன் கூடி எந்த ராசியிலிருந்தாலும் அவ்வாறன்றி தனித்திருக்குஞ் சந்திரனை வியாழனானவன் பார்த்தாலும் இவ்வுலகில் அதிகமாக மழை பெய்யும் எ-று. (21)

பெய்யுமே மழையு மிக்கப் பிரபலச் சண்டன் றேளில்
உய்யத்தா னிருக்கமுன்னேஒள்ளியோன்செல்லப்பின்னே
துய்யதேர்ப் பாகன் றானுந் தொடர்ந்துடனடப்பானாகிற்
செய்யதி லிட்ட வித்துந் திடம்பெற விளையும் பாரே.

(இ-ள்) சூரியனானவன் விருட்சிகராசியி லிருக்க அவனுக்கு முன்பாக தனுராசியில் சுக்கிரனிருக்க சூரியனுக்குப்பின் துலாராசியில் புதனானவன் இருக்குங்காலத்தில் மழை எ தே ஷ் ட மாகப் பெய்து கழனியில் விதைத்த பயிர்கள் செழிப்பாக விளையும் எ-று. (22)

பார்க்கவே தோணி யையம் பகலவன் வாவி சுங்கன்
சேர்க்கையா யஸ்தமானத் திருந்திடில் விளைவு குன்றும்
கோர்க்கையாந் தாசி தூற்றல் கொடுநுகத் திடியி டித்தல்
மார்க்கமாஞ் சோதிமின்னல் வந்திடில்மழையென்றோதே.

(இ-ள்) சுக்கிரனானவன் இரேவதி நட்சத்திரத்தில் அஸ்தமனமாகில் பின்னாகநட்ட பயிர்களும் அசுவினி, பரணி நட்சத்திரத்தில் அஸ்தமனமாகில் சகல பயிர்களும் உத்திர நட்சத்திரத்தில் அஸ்தமனமாகில் முன்னாக நட்ட பயிர்களும் சேதமாகும். அன்றியும் எந்த மாதத்திலாவது பரணி நட்சத்திரத்தில் தூற்றலும், மக நட்சத்திரத்திலிடியும், சுவாதி நட்சத்திரத்தில் மின்னலும் உண்டாகில் அக்காலத்திற் பூரணமான மழை பெய்யும் எ-று. (23)

ஓதவே யமர பக்கத் துறுஞ்சதுர்த் தசியி னோடு
நீதவட் டமிச துர்த்தி நிகழுமித் திதியிற் றனும்
மாதவச் சுங்க னஸ்த மனமுட னுதய மாகில்
பூதல நதிக ளெங்கும் புனற்பெருக் கதிக மாமே.

(இ-ள்) தேய்பிறையில் வருகின்ற சதுர்த்தசி, அட்டமி, சதுர்த்தி இந்த மூன்று திதிகளில் எந்தத் திதியாவது வருந் தினத்தன்று சுக்கிரனானவன் அஸ்தமனமேனும் உதயமேனும் பெறுவானாகில் நதிகளெங்குந் தண்ணீரதிகமாக வோடும் எ-று. (24)

அதிகவி கதிர்க்கு முன்னே யரந்தனும் போவா னாகில்
ததியினிற் கொசுப் பறக்குந் தகமைபோற் றூற்ற லுண்டாம்
பதியினிற் றருக்க ளீரப் பசையிலா துலர்ந்து போகும்
நதியில்நீ ரன்றி யூற்று நற்சல மருந்து வாரே.

(இ-ள்) சுக்கிரனுக்கும் சூரியனுக்கும் முன்பாக செவ்வாயான வன் செல்வானுகில் கொசுப் பறந்ததைப்போல சிறிய தூற்றலுண் டாகும். அதனல் மரங்களெல்லாம் ஈரமின்றிக் காய்ந்துபோகும். ஆற்றில்தண்ணீரோட்டமின்றிஊற்றுநீரெடுத்துண்பார்கள் எ-று(25)

அருக்கன்முன் னரத்த னேகி லாலியும் பெய்தி டாது
உருக்கமாங் கவிக்கு முன்ன மூர்ந்திடத் தாரை பெய்யும்
செருக்குள நீலன்முன்பு செலவக விலையுங் குன்றும்
இருக்கவே புந்தி முன்ன மேற்றமாங் காற்றுண் டாமே.

(இ-ள்) சூரியனுக்குமுன் செவ்வாயானவன் செல்வானுகில் அக்காலத்தில் மழை பெய்யாது. சுக்கிரனுக்கு முன்பாக செவ்வா யானவன் போவானுகில் அதிகமாக மழை பெய்யும். சனிக்கு முன் னஞ் செவ்வாய் செல்ல அகவிலை குறையும். புதனுக்கு முந்தி செவ் வாய் போனல் அதிகக் காற்றுண்டாகும் எ-று. (26)

உண்டாம் பொன்னனதிசாரத் துற்றேயிருக்கவக்கிரத்திற்
பண்டாங் காரி வந்திடவே பலவா றுணவு மதிகமதாய்க்
கண்டாங் குலவுங் கதிர்மதியைக் கவிந்தே யரவந் தொடும்போது
துண்டாம் பரிவே டந்தோன்றச் சுகமா மனுக்கள் நாலிலொன்றே.

(இ-ள்) வியாழனானவன் அதிசாரத்தி லிருக்கும்போது சனி யானவன் வக்கிரகதியிலிருந்தால் அக்காலத்தில் பலவிதமான உண வுப் பொருளதிகமா யிருக்குஞ். சூரியனையாவது சந்திரனையாவது கிராணம் பிடிக்கும் சமயத்தில் பரிவேட முண்டாகில் மனிதர்கள் நாலில் மூன்று பங்கு சுகம் பெற்றிருப்பார்கள் எ-று. (27)

ஒன்றுஞ்சாமங் கதிர்மதியை யோங்கும் பரிவே டஞ்சூழக்
குன்றுக் கலக மிருசாமங் குலவு மூதக மதிகமதாம்
நன்று மூன்றுஞ் சாமமெனில் நாட்டிற் பயிரு மிகச்செழிக்கும்
அன்றுஞ் சாமம் நான்காகி லடுக்குஞ்சேத மெனச் சொல்லே.

(இ-ள்) ஒருநாட் பகல் முதற் சாமத்தில் சூரியனையும் இரவு முதற் சாமத்திற் சந்திரனையும் பரிவேடஞ் சூழுமாகில் கலகமாகும். இரண்டாஞ் சாமத்திற் பரிவேடமிட்டால் மழை யதிகமாகப் பெய்யும். மூன்றாஞ் சாமத்திற் பரிவேடமுண்டானால் தானியங்களதிகமாக விளையும் நாலாஞ் சாமந் தோன்றில் மேலாம் பயிருங் கீழாம் எ-று. (28)

சொல்லு மரசன் றனைவேடஞ் சூழப் பீடை யந்தணர்க்காம்
செல்லுங் குசனைக் கவித்திடிலோ சேட்டை யதிகஞ் செய்திடுவர்
புல்லுங் கன்னிக் குடையோனைப் பொருந்த விதைக்கு முதலில்லை
வெல்லுங் கவியைக் கலந்திருக்க மேவும் பெண்கட் காகாதே.

(இ-ள்) வியாழனைச் சுற்றிப் பரிவேடமிட்டால் பிராமணர்களுக்குப் பீடையாம். செவ்வாயைச்சூழ்ந்துவட்டமிட்டால்மனிதர்கள் அநேகவிதமானசேட்டைகளைச்செய்வார்கள்.புதனைப்பரிவேடங்கவிக்கில் செய்யில் விதை விதைக்க முதலில்லாமற் செய்யும். சுக்கிரனைப் பரிவேடம் வளையுமாகில் புடவியில் மடவாருக் காகாவாம் எ-று. (29)

ஆகா மந்தன் றனைக்கவிக்கி லரசர் பதியை விட்டிடுவர்
வாகாமிரவிக் கடுத்திருக்கில்மாந்தர்க் கதிகவிபத்துண்டாம்
பாகாம் புகையைப் போலிருக்கிற் பலவாம் பொருளுஞ் சேதமுறும்
போகாக் கறுப்பு வருணமெனிற் புவியிற் பஞ்ச முற்றிடுமே.

(இ-ள்) சனியைப் பரிவேடங்கவிக்கில் வேந்தர் தமது நாட்டை விட்டு விலகி நிற்பர். சூரியனுக்குச் சமீபமாகப் பரிவேடந் தோன்றில் மனிதர்கள் இன்புறாமல் துன்புறுவார்கள். அப்பரிவேடமானது புகை நிறம்போல விருந்தால் பற்பலவிதமான பொருட்களும் நட்டமாகும். அஃதன்றி கறுப்பு நிறமாக விருந்தால் பாரிற் பஞ்சமுண்டாம் எ-று. (30)

உற்ற விரத்த வருணமெனி லுலகி லரசர்க் காகாவாம்
கற்ற கன்னி யாழ்மீன்விற் கழறு மிந்த மாதமதில்
சுற்றுஞ் சுடரோ னம்புலியைத் தொட்டுக் கிராண முற்றாக்கால்
பற்றும் பயிர்கள் செழித்தோங்க பாரி லாலி பெய்திடுமே.

(இ-ள்) அப்பரிவேடமானது இரத்தவருணமாயிருந்தால் மேதினி வேந்தருக்கு வாதனையுண்டாம். புரட்டாசி, ஆனி, பங்குனி, மார்கழி இந்த நான்கு மாதங்களில் எந்த மாதத்திலாவது சூரிய கிராணமாவது அல்லது சந்திரகிராணமாவது உண்டாகில் அக்காலத்தில் பயிர்கள் செழித்து விளையும்படியாகத் தக்க மிக்க மழை பெய்யும் எ-று. (31)

திடமாம் வெள்ளைகாக்கைதனைத்தேசமதனிற்கண்டாலும்
அடமா மிரவி லிந்திரவி லண்ட மதனிற் கண்டாலும்
தடமாம் வான்மீ னுதித்தாலுந் தக்கதில்லை மாந்தர்களும்
இடமா மந்தப் பதிநீங்கி யிருப்ப தழகா மெனச் சாற்றே.

(இ-ள்) இத்தேசத்தில் வெள்ளைக்காக்கையைக் கண்டாலும், இரவில் ஆகாயத்தில் இந்திர தனுசு உண்டாகக் கண்டாலும், வால் நட்சத்திரம் ஆகாயத்தில் உதிக்கக் கண்டாலும் அந்த நகரத்தை விட்டு அடுத்த நகரம் போயிருப்பது மிகவும் உத்தமம் எ-று. (32)

சாற்றுங் காரி சேயினெடு தக்க வாண்டை யளப்பானும்
போற்றுஞ் சுங்க னின்னவரை புரணி விண்ணில் மறைக்குமெனில்
சீற்ற மிகுக்க வரசருக்குள் திரண்ட கலக முண்டாகி
ஏற்ற மண்ணி லிரத்தமது மெங்குஞ் சகதி யாகிடுமே.

(இ-ள்) சனி, செவ்வாய், வியாழன், சுக்கிரன். இந்த நால்வர்களிலொருவரை ஆகாயத்திற் சந்திரனைவன் மறைப்பானுகில், அக்காலத்தில் அரசர்கள் கோபங்கொண்டு ஒருவருக்கொருவர் யுத்தஞ் செய்வார்கள். அதனால் அவனியில் இரத்தஞ் சிந்தி சகதியாகும். எ-று. (33)

ஆகுஞ் சசியைச் சேயேனு மலது காரி கூடுங்கால்
வாகு வானிற் பரிவேடம் வருகு மாகி லிப்புவியில்
நோகும் வன்னி தாபசுரநோயால்மாந்தர்மெலிவடைந்து
சாகும் நாலில் முப்பங்கு தங்குமிங்க ணெனச் சொல்லே.

(இ-ள்) சந்திரனை, செவ்வாயாவது அல்லது சனியாவது கூடி யிருக்குங்காலத்தில் ஆகாயத்தில் பரிவேடம் போடுமாகில் அக்கினி தாபசுர முண்டாகி யதனல் பூமியிலுள்ள மனிதர்களில் நான்கிலொரு பங்கு சேதத்தையும்மற்றவர்கள்சுகத்தையுமடைவார்கள். எ-று.(34)

சொல்லச் சேயன் காரியொடுதோன்றவன்றி முடவனராப்
புல்லக் கூடி விருந்திடுங்கால்புதனும்விண்ணிற் பிரகசிக்க
செல்லந் திகழுமம்புவியிற்செப்பற் கரியகொடும்பிணியால்
அல்லல் மிகவுண் டாகிடு மென் றறிவா யெந்தன் பெண்டிருவே.

(இ-ள்) செவ்வாயுஞ் சனியும் சேர்ந்திருக்கும்போதாவது அல்லது சனியும் இராகுவுஞ் சார்ந்திருக்கும் போதாவது ஆகாயத்திற் புதனனவன் வாகாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்குமாகில் அக்காலத்தில் திரண்ட செல்வத்தையுடைய பூமியின் கண்ணுள்ள மாந்தர்கள் அஞ்சும்படியான கொடிய நோயுண்டாகி அதனல் மிகுந்த வருத்தமுறுவார்களெனக் கண்மணிக் கொப்பாகிய பெண்மணியே நீ தெரிந்துகொள்வாயாக. எ-று. (35)

திருவாங் குணக்கிற் பொன்னனுறத் திகழுங் குடக்கிற் சுங்கனுமே
வரவாங் கொருவர்க் கொருவர்கதி மாறு தேழாம் பார்வையுறில்
பெரியோ ரென்ற யோகிகட்கும் பிறங்கு மறையோர் தங்களுக்கும்
அரிதா மசுரன் போன்ருேரா லதிக பயந்தா னுண்டாமே.

(இ-ள்) கிழக்கில் வியாழனும் மேற்கில் சுக்கிரனும் உதயமாகி ஒருவர்க்கொருவர் ஏழாமிடத்திலிருந்து பார்த்துக் கொள்வார்களாகில் அக்காலத்தில் முக்காலமுணர்ந்த மூதறிவுடைய முனிவர்களுக் கொப்பாகிய பெரியோர்களுக்கும் வேத சாஸ்திரங்களை யோதியுணரும் அந்தணருக்கும் தீயசெய்கையை யுடைய மாயவரக்கரைப் போன்ற வஞ்சமிகுந்த நெஞ்சையுடைய கசடர்களால் அதிக பயங்கரமுண்டாகும். எ-று. (36)

உண்டா மேகங் காக்கைநிற முற்றே யிருக்குங் காலத்தும்
கண்டாய் கதிரோன் மதிநிகராய்க் கனலற் றிருக்குங் காலத்தும்
அண்டா வன்னி மூலைக்காற் றடித்தே யிருக்கும் வரைக்கிந்தப்
பண்டா முலகி லுதகமதும் டாங்காய்ப் பெய்யா தெனவுரையே.

(இ-ள்) மேகமானது காக்கை நிறம்போலக் கறுப்பாயிருக்கின்ற காலத்திலும் சூரியனானவன் சந்திரனைப்போலக் குளிர்ச்சியாகி வெப்பமில்லாமலிருக்கின்ற காலத்திலும் தென் கிழக்கு மூலையிலிருந்து காற்றுண்டாகுங் காலத்திலும் இப்பூமியிற் மழையானது முறையின்றி ஆங்காங்கு கண்ட வருசமாகப் பெய்யும். எ-று. (37)

உரைக்க மேகங் கந்துகந்தாயுற்றே யிருக்கக் கீழ்க்காற்றும்
தரைக்கண் ணடிக்கத் தெற்கதனிற் றானு மேகங் கூடிடுக
இரைக்கமின்னல்வடக்கிலுறவேற்றகுடக்கில்விற்போடில்
விரைக்கும் விரையுஞ் செழிப்பாக விளைய வுதகம் பெய்திடுமே.

(இ-ள்) மேகமானது கந்துகந்தாய்ச் சிதைவுற்றிருக்குங் காலத்திலும் கீழ்க்காற்றடிக்குங் காலத்திலும் தெற்கு திக்கில் மேகமானவை கூடுங்காலத்திலும் வடக்கு திக்கில் மின்னலுண்டாகுங் காலத்திலும் மேற்கு திக்கில்விற்போடுங்காலத்திலும் வயல்களில் விதைத்த விதைகள் செழிப்பாய் விளையும்படியான அதிக மழை பெய்யும் எ-று. (38)

பெய்யுங் கும்பங் கடகமொடு பிலத்த சிங்க மிம்மதியில்
உய்யும் பொன்ன னஸ்தமன முற்றே யிருக்க வக்காலம்
நொய்யு மிகலன் றிரண்டடர்ந்தே நுவலும் நகரி னுட்புகுந்து
செய்யுங் கொடுமை மிகவதனாற் செய்யிற்பயிர்களுய்யாதே.

(இ-ள்) மாசி, ஆடி, ஆவணி இந்த மூன்று மாதத்தில் எந்த மாதத்திலாவது வியாழனானவன் அஸ்தமனம் பெற்றிருந்தால் அக்காலத்தில் நரிகளானவை கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து நாட்டினுட் புகுந்து காட்டிலுள்ள பயிர்களை கோட்டியாகப் பரித்தெரிவதனால் தேட்டமாக நட்ட பயிர்கள் வாட்டமடையும். எ-று. (39)

தேடும் பொன்னன் சேய்நீலன் செப்பு மிவர்க்கு முன்பாக
நாடுங் கதிரோன் நடந்திடுமந் நாளின் வரைக்கும் வக்கிரமாம்
ஓடுமிந்த மூவர்களு மோங்குங் காலோன் பதுகடந்தால்
சாடும் வக்ர கதி நீங்கிச் சாந்த குணமுண் டாவாரே.

(இ-ள்) வியாழன், செவ்வாய், சனி இந்த மூன்று பேர்களுக்கும் முன்பாக சூரியனானவன் போவானாகில் வக்கிரமாம். இவ்விதம் வக்கிரத்தை யடைந்த கிரகங்களிருக்கின்ற நட்சத்திர பாதத்திற்குமேல் ஒன்பது பாதங்கள் சூரியனானவன் கடந்து சென்றால் மேற்சொன்ன கிரகங்கள் வக்கிரம் நீங்கிச் சுபாவகுணத்தை யடைவார்கள். எ-று. (40)

ஆவார் தேள்மீ னந்தியத்து மரியு மிடப நடுவதிலும்
தேவாங் குருவுஞ் சாவகனுந்திடமாய்க்குலவுங் காலமதிற்
பூவா னுதகம் பெய்யாது புலமும் நலமாய் விளையாது
காவாஞ் சோலைத் தருவினத்திற் காயுங் கனியு முதிர்ந்திடுமே.

(இ-ள்) விருட்சிகவிராசி, மீனவிராசி இந்த விரண்டிராசிகளின் கடைக்கூறினும் இடபவிராசி, சிம்மவிராசி இந்தவிரண்டிராசிகளின் நடுக்கூறினும், வியாழனுஞ் சனியுஞ் சஞ்சாரஞ் செய்கின்ற காலம் வரையிலும் இவ்வுலகத்தில் மழை பெய்யாமல் வயில்களில் நட்ட பயிர்கள் விளைவின்றியும் சோலைகளிலுள்ள மரக்கூட்டங்களில் உண்டாகும் பூ, காய், கனி முதலியதெல்லாங் கருகிவிடும் எ-று. (41)

இடவே பொன்னன் சுங்கனுமெவ் வருட மேந்த லாகவரில்
திடமா மாரி நான் மரக்காற் செவ்வா யிரவி பதக்காகும்
அடவாம் புந்தி கலங்கனெனி லாமேமூன்று குறுணி மழை
தடமா மந்த னொருகுறுணி தானும் பெய்யு மெனப்பகரே.

(இ-ள்) எந்த வருடத்திலாவது வியாழனுஞ் சுக்கிரனும் அரசனாக வந்தால் மழையானது நாலு மரக்காலும், செவ்வாயுஞ் சூரியனும் இராசாவாகவரில் பதக்கு மழையும், புதனும், சந்திரனும் வேந்தனாக வருவாராகில் மழை முக்குறுணியும், சனி பூபதியாகில் குறுணி மழையும் பெய்யும் எ-று. (42)

பகருஞ் சேலின் மதிமுதலாம் பக்கத் தேகத்திதிவருநாள்
தகமை யந்த வாரபதி தானு மரச னாகிடுவன்
உகமை மேட மதிவாரத் துற்றோ னமைச்ச னாகிடுவன்
சுகமாஞ் சிம்ம மாதந்தாள் தோன்று மவன்சே னாபதியே

(இ-ள்) ஒரு வருடத்தில் பங்குனி மாசம் அமாவாசை சென்ற தின்பின் வருகின்ற பூர்வபட்சத்துப் பிரதமைத் திதியானது எந்த வாரமோ அந்த வாரத்துக்கதிபதியானவன் அடுத்துவரப்போகும் வருடத்திற் கரசனுவான் அவ்விதம் பிறந்த சித்திரை மாசத்தின் முதற்றேதி எந்த வாரமோ அந்த வாரத்திற்குடையவன் மந்திரியாம். ஆவணி மாசத்தின் முதற்றேதி யெந்த வாரமோ அக்கிழமைக்குடையவன் சேனுதிபதியாம் எ-று. (43)

பதிக்குங் கடக மதிதோன்று பவனுந் தானி யாதிபனும்
உதிக்குந் தனுவின் வாரத்தோனுகந்தபரியின் காவலனும்
மதிக்குந் தண்டு மதிபிறக்கும் வாரத் ததிபன் மேகாதி
கதிக்குஞ் சேலின் மதிபிறந்தோன் கருது ரசாதி பதிதானே.

(இ-ள்) ஆடி மாசம் முதற்றேதி யெந்த வாரத்திற் பிறக்கின் றதோ அந்த வாரத்திற்குடையவன் தானியாதிபதியாம். மார்கழி மாசம் முதற்றேதி யெந்தவாரம் பிறக்கின்றதோ அந்த வாரத்திற் குடையவன் அஸ்வாதிபதியாம். ஆனிமாசம் முதற்றேதி யெந்த வாரம் வருகின்றதோ அந்த வாரத்துக்குடையவன் மேகாதிபதி யாம். பங்குனி மாசம் முதற்றேதி எந்த வாரம் பிறக்கின்றதோ அந்த வாரத்துக் குடையவன் ரசாதிபதியாம். எ-று. (44)

தானக் கோலின் மதியுதிக்கத் தக்கோ னீர சாதிபதி
மானக் கலையின் மதிவார மன்னன் பிரசை யாதிபனும்
போன சாலிவாகனனின்பொருந்துசகாப்தமதையெட்டில்
ஈனப் பெருக்கி நவமதற்கு மீய்ந்த சேடந் தனைக்கண்டே.

(இ-ள்) அற்பசிமாசம் முதற்றேதி எந்த வாரம் பிறக்கின் றதோ அந்த வாரத்துக்குடையவன் நீரசாதிபதியாம் - தைமாசம் முதற்றேதி எந்தவாரம் பிறக்கின்றதோ அந்த வாராதிபதி பிரசைகளுக்கதிபதியாம். சாலியவாகன சகாப்தத்தை எட்டிற்பெருக்கி ஒன்பதற்குக்கொடுத்த மிச்சத்தைத் தெரிந்துகொள் எ-று. (45)



கண்ட வொன்றுக் காவர்த்தங்கருதுந்துதிகைசம்வர்த்தம்
பண்டாந் திருதி விருட்கலமாம் பகருஞ் சொர்ணம் நான்கைந்து
உண்டாங் கால மறு நீல முற்ற வேழுக் கேவருணம்
தண்டா வெட்டுக்காற்ருென்பான்சாருந்தமமேகந்தானே.

(இ-ள்) மேற்கண்டவிதமாகப் பெருக்கிக்கொடுத்த மிச்சத் தொகையானது ஒன்ருகில்-ஆவர்த்தன மேகமென்றும் இரண்டாகில் சம்வர்த்தமேகமென்றும் மூன்ருகில் விருட்கலமேகமென்றும் நான் காகில் சொர்ணமேகமென்றும் ஐந்தாகில் காலமேகமென்றும் ஆருகில் நீலமேகமென்றும் ஏழாகில் வருணமேகமென்றும் எட்டாகில் வாயுமேகமென்றும் ஒன்பதாகில் தமோமேகமென்றுந் தெரிந்து கொள்வாய் எ-று. (46)

தாஞு மாவர்த் தனமேகந் தனக்குத் தாரை யதிகமுறும்
கோஞுஞ் சம்வர்த் தனமேகங் கூடி லுதகஞ் சமமாகும்
காஞுஞ்சொர்ணமேகமெனிற்கலக்கப்பெய்யுமெத்திசையும்
வாஞுங் கால மேகமெனில் வருகு மாலி யற்பமதே.

(இ-ள்) ஆவர்த்தன மேகமாஞல் அதிகமழைபெய்யும். சம் வர்த்தமேகமாஞல் சமரசமான மழைபெய்யும். சொர்ணமேகமாஞல் எங்கும் நிரந்தரமானமழைபெய்யும். காலமேகமாஞல் அற்பமழை பெய்யும் எ-று. (47)

அற்பமாம் நீல மேக மாகிடி லால மில்லை
சொற்பமாம் விருட் கலத்திற் சொரியுமாம் வருண மேகம்
பொற்புள வாயு மேகம் பொருந்தக்காற் றதிக மாகும்
விற்பன தமமே கந்தான் மேலும்நன் மாரி யுண்டே.

(இ-ள்) நீலமேகமாஞல் மழையில்லை. விருட்கலமேகமாஞல் அற்பமழை பெய்யும். வருணமேகமாஞல்மழையதிகமாகப்பெய்யும். வாயுமேகமாஞல் அதிகக்காற்றுண்டாகும். தமோமேகமாஞல் எங் கும் சம்பூரணமான மழைபெய்யும் எ-று. (48)

உண்டாஞ் சிம்மங் கன்னிதுலாமோங்கு மிந்த மாதமதிற்
பண்டாங் குருநாள் முதலேழிற் பண்பாங் குடக்கில் விற்போடக்
கண்டா லந்த நகர் நீங்கிக் கடுகிமற்றோ ரிடம் வசிக்கத்
தண்டா மரையா ளனுக்கிரகந் தானு முண்டா மென்றிடுமே.

(இ-ள்) ஆவணி, புரட்டாசி, அற்பசி இந்த மாதங்களில் எந்த மாதத்திலாவது பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை இந்த ஏழு நட்சத்திரங்கள் வரும் நாட்களில் மேற்குதிக்கில் விற்போடுமாகில் அந்நகரத்தைவிட்டு மற்றோர்நகரிற் சென்று வசித்திருக்க அங்கு லெட்சுமி கடாட்ச முண்டாம் எ-று. (49)

என்றாங் கடக மதியதுவு மிரவி வாரத் துதித்தாலும்
குன்றாச் சிம்ம மதிதானுங் குலவு மந்த னுதித்தாலும்
பொன்றாத் திங்க ளாங்கன்னி பொருந்தக் குசநா ளுதித்தாலும்
நன்றா யுற்ற கடல்வற்றி நாட்டிற் கெடுதி யுண்டாமே.

(இ-ள்) ஆடிமாதமானது ஆதிவாரம் பிறந்தாலும், ஆவணிமாதமானது சனிவாரம் பிறந்தாலும், புரட்டாசிமாதமானது மங்களவாரம் பிறந்தாலும் கடல்வற்றி நட்டபயிர்கள் விளையா எ-று. (50)

உண்டா மடுப்பு முதலாக வோங்கு நான்கு நாட்களிலே
பண்டா மெந்த மதியுதிக்கிற் பயிர்க ளதிக விளைவாகும்
கண்டாஞ் செங்கை யொடுநான்குங் கனத்த தாரை மிகப்பெய்யும்
கொண்டாங் கலப்பை முதற்கொண்டு கொக்குவரைக்குஞ் சேமமதே.

(இ-ள்) பரணி, கார்த்திகை, உரோகணி, மிருகசீரிடம் இந்த நான்கு நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது எந்த மாதமேனும் பிறக்குமாகில் தானியங்களதிகமாக விளையும். திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயிலியம் இந்த நான்கு நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது எந்த மாதமேனும் பிறக்குமாகில் தக்கமழை மிக்கப்பெய்யும். மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம் அனுசம், கேட்டை, மூலம் இந்தப்பத்து நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்திலாவது எந்தமாதமேனும் பிறக்குமாகிற் பூமியிற் சேமமுண்டாகும் எ-று. (51)

சேமம் பொய்கை முதலிரலே சேரும் வரையி லுதகமிலே
நாம மெந்த மதியுஞ்சேய் நாலி லுதிக்க வன்னிகள்ளர்
பூமன் னவராற் றுன்பயமாம் பொருந்து மந்தன் விலேகுறையும்
நேமக் கதிரோன் வாரமெனின் நிகழும் விபத்தா மெனச்சொல்லே.

(இ-ள்) பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம் பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, அசுவனி இந்த வொன்பது நட்சத்திரங்களில் எந்தநட்சத்திரத்திலாவது எந்த மாதமேனும் பிறக்குமாகில் இப்புவியிலற்பமேனும் மழை பெய்யாது. அன்றியும் எந்த மாதமேனுஞ் செந்தீவண்ணனுகிய செவ்வாய்க்கிழமையிற் பிறக்குமாகில் அரசர்கள் சோரர்கள் அக்கினியினுலும் பயமுண்டாகும். சனிக்கிழமையிற் பிறக்குமாகில் அகவிலே குறையும். ஞாயிற்றுக் கிழமையிற் பிறக்குமாகில் நோயுற்றுப் பின் சுகமடைவார்கள் எ-று. (52)

சொல்லச் சொல்லா வாரமதிற் றேன்றிற் சேம முண்டாகும்
புல்ல மதியுஞ் சலராசி புக்கக் காரி சுக்கிரனும்
வெல்லக் கூடி யிருந்தாலும் விரும்பி யவனேப் பார்த்தாலும்
நல்ல வுதகம் பெய்திந்த நாட்டிற் செல்வஞ் சிறந்திடுமே.

(இ-ள்) மேற் சொல்லாத திங்கள், புதன், வியாழன், வெள்ளி இந்தக்கிழமைகளில் எந்த மாதமாவது பிறக்கு மாகிற் பூமியிற் சாமமின்றிச் சேமமுண்டாகும். ஈதன்றியும் சந்திரனுனவன் சலராசியாகிய கடகம், மகரம், கும்பம், மீனம் இந்த நான்கிராசிகளில் ஏதேனுமொருவிராசியிலிருக்க அவனே சுக்கிரனுஞ், சனியுங் கூடினுலும் அல்லது பார்த்தாலும் நல்ல மழைபெய்து நாட்டிற் கேட்டையோட்டி யொவ்வோர் வீட்டிற் செல்வம் மிகவுண்டாகும் எ-று. (53)

இடுகச்சோமன் சலராசியிருக்க வைந்தே ழொன்பதனிற்
றெடுகச் சுங்கன் மந்தனுறத் தோன்றும் புவியிற் பெருமழையாம்
விடுகத் தண்டு பெண்ணதனில் விரும்பிச் சண்டன் வந்திருக்க
முடுக வரியிற் புந்திவர மூழு மிக்க மாரியதே.

(இ-ள்) சந்திரனுனவன் சலராசியாகிய, கடகம், மகரம், கும்

பம், மீனம், இந்த நான்கிராசிகளில் ஏதேனு மொரு விராசியிலிருக்க. அதற்கு, ஐந்து, ஏழு, ஒன்பதில் சுக்கிரன், சனியிருந்தாலும். இஃதன்றி, மிதுனம், கன்னி, இவ்விருராசிலொரு ராசியில் சூரியனும். சிம்மராசியில் புதனும் வந்திருக்கிற் பூமியெங்கும் நல்லமழை பெய்யும் எ-று. (54)

மாரி மரக்கா லதிற்சுங்கன்வரவுமைந்தே ழொன்பதனில்
காரி மதியுந் தானிருக்கக் காணி லதிக மழையுண்டாம்
கோரி யரியிற் சசியுமுறக் கோலிற் சுடரோன் கவிபுந்தி
சேரத் தேளிற் குருவலது சேய னிருக்கிற் பெருமழையே.

(இ-ள்) சுவாதி நட்சத்திரத்திற் குடைய துலாராசியிற் சுக்கிரனிருக்க ஐந்து, ஏழு, ஒன்பதில், சனியுஞ், சந்திரனு மிருக்கில் மழையதிக மாகப்பெய்யும், அன்றியும், சிம்மத்திற் சந்திரனிருக்க, துலாத்தில், சூரியன், சுக்கிரன், புதனுமிருக்க, விருக்ஷிகத்தில், குருவாவது, செவ்வாயாவது, இருக்க அதிகமழை பெய்யும் எ-று. (55)

பெருகச்சேலிற்சசியிருக்கப் பிறங்கும்விடையிற்கவியிருக்க
வருகத் தண்டின் மதிமகனு மழையும் பெய்யு மதிக மதாய்
சருகொத் திருக்கும் பயிர்களெலாந் தழைக்குஞ் சாலி மிகவோங்கும்
கருகுந் தருக்கள் நீருண்டு காயுங் கனியுந் தந்திடுமே.

(இ-ள்) மீனத்திற் சந்திரனிருக்க, இடபத்திற் சுக்கிரனிருக்க, மிதுனத்தில் புதனிருக்க மழையதிகமாகப் பெய்து தீய்ந்து போகுந் தருவாயிலிருந்த பயிர்களும் செழித்து விளையவும். கருகுந்தழியிலிருந்த தருக்களாகிய மரங்கள் செழித்து வளர்ந்து அதன் பலனாகிய கனிகளைத் தருகும் எ-று. (56)

தந்தா யுடுவிட் டோருடுவைச் சண்டன் பற்றுங் கன்னலுடன்
நந்தா தொன்பா னுடன்கூட்டி நாலுன் கதனிற் றுன்பெருக்கி
சிந்தா தெட்டிற் கீய்ந்திடவச் சேடமொன்றுக் கற்பமழை
வந்தா லிரண்டுக் கதிகமழை வன்னி சுரமா மூன்றுக்கே.

(இ-ள்) சூரியனனவன் ஒரு நட்சத்திரத்தை விட்டு மற்றொரு நட்சத்திரத்திற்குப் போகின்ற நாழிகையுடன் ஒன்பது கூட்டிக்

கூடுந் தொகையை பதினாறிற் பெருக்கி எட்டில் வகுத்துக் கண்ட மீதம் ஒன்றாகில் நன்றல்ல தற்பமழையாம், இரண்டாகில் திரண்ட மழையாம், மூன்றாகில் அக்கினி தாபசுரமுண்டாம் எ-று. (57)

மூன்ற நன்றி நாலினுக்கு முழங்கு மாலி காற்றதிகம்
சான்ற வைந்துக் கதிகமழை சட்ட மதற்குச் சஞ்சலமாம்
தோன்றச் சத்த மென்றதற்குச்சொல்லெப்பொருளும்விலைகுறையும்
ஊன்ற வுலகி லுதகமது மோங்கிப் பெய்யா தெட்டுக்கே.

(இ-ள்) நான்காகில் காற்று மழையுங் கலந்துண்டாம். ஐந்தாகில் அதிகமாக மழை பெய்யும். ஆறாகில் சஞ்சலமுண்டாம். ஏழாகில் அகவிலை குறையும். எட்டாகில் இவ்வுலகில் திட்டமாக மழையில்லை எ-று. (58)

எட்டுங் கங்குல் முதலாக வியம்பு மிருக வதனத்தின்
மட்டு மிரவி யிருக்கும்வரை வானும்பெய்துசுபிட்சமுறும்
கொட்டுஞ் செங்கை முதற்பானு குலவப் புயங்கம் வரைமழையாம்
கட்டுங் கலப்பை கன்னிவரைக் கதிரு மிருக்க மழையிலையே.

(இ-ள்) பரணி, கார்த்திகை, உரோகணி, மிருகசீரிடம், இந்த நான்கு நட்சத்திரங்களில் சூரியனானவன் சஞ்சரிக்குங் காலம்வரை உலகில் மழை பெய்து செழிப்புண்டாகும். திருவாதிரை, புனர் பூசம், பூசம், ஆயிலியம் இந்த நான்கு நட்சத்திரத்தில் சூரியனானவன் இருக்குங் காலத்தில் அதிகமாக மழை பெய்யும். மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை இந்த வைந்து நட்சத்திரத்தில் சூரியனானவன் வசிக்குங் காலத்தில் மழை யில்லை எ-று. (59)

இல்லாச் சுடர்தொட் டவுணன்மட் டிரவி யிருக்கச் சுபிட்சமிலை
கல்லாம் பொய்கைச் செக்குவரை ககனு மிருக்க வதிகநலம்
நல்லாங் குஞ்சங் கொண்டிவுளி நாடியிருக்கச் செங்கதிரோன்
எல்லாப் பொருளும் விலைகுறையு மென்றேயறிவாயொண்டொடியே.

(இ-ள்) சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம் இந்த வைந்து நட்சத்திரங்களில் சூரியனானவன் சஞ்சரிக்குங்காலத்தில்

சேமமன்றிச் சாமமுண்டாம். பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம் இந்த வைந்து நட்சத்திரங்களில் சூரியனுனவன் உலவுங்காலத்தில் அதிக நன்மை யுண்டாம். பூரட்டாதி, உத்திரட்டாதி, இரேவதி, அசுவனி இந்த நான்கு நட்சத்திரத்தில் சூரியனுனவன் வசிக்கும் காலத்தில் எல்லாப் பொருட்களும் விலை குறையுமென்பதாகத் தெரிந்துகொள்வாய்ப் பெண்ணே எ-று. (60)

ஓடிச் சுங்கன் செங்கதிரோ னுக்கு முன்னம் விளக்கு முதல்
நாடிப் பனையின் வரைகுணக்கில் நயந்தங் கமர்ந்தே யிருந்தாலும்
தேடிக் கலப்பை முதற்கன்னி திகழக் குணக்கிற் சுடரின்பின்
மோடி யாக விருக்கவனு விருட்டி யென்ன மொழிந்திடுமே.

(இ-ள்) சுக்கிரனுனவன் சூரியனுக்கு முன்பாக கிழக்குத் திக்கில் சுவாதி, விசாகம், அனுசம் இந்த மூன்றி லொன்றிருந்தாலும் அல்லது சூரியனுக்குப்பின்பாக மேற்கு திக்கில், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை இந்த நட்சத்திரங்களி லிருந்தாலும் மழையில்லை எ-று. (61)

மொழியும் விளக்கு முதற்பெண்ணை முற்றுஞ் சுடர்க்கு முன்பாக
வழியாய்க் குடக்கிற் கவியுறினும் வாய்க்கால் முதலாய்த் தூசுவரை
சுழியாப் பானு தனக்குப்பின் சுங்க னிருக்க மாமாரி
அழியாப் பெய்யு மெனவறிவா யணங்கே யிந்தப் பாரதனே.

(இ-ள்) மேற்சொன்னதற்கு விபரீதமாக சுவாதி, விசாகம், அனுசம் இந்த நட்சத்திரங்களில் சுக்கிரனுனவன் சூரியனுக்கு முன்பாக மேற்கு திக்கிலிருந்தாலும் அல்லது சுக்கிரனுனவன் சூரியனுக்குப் பின்பாகக் கிழக்குதிக்கில் மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை இந்த நட்சத்திரங் களிலிருந்தால் ஓ! பெண்ணே பூலோகத்தில் அதிகமாக மழைபெய்யும் எ-று. (62)

பாரின் மேட மதியதனிற் பளிங்க னுதய மஸ்தமனம்
நேரிற் றேச மிகச்செழிக்கும் நிகழு மிடபங் கெடுதியுறும்
சாரின் மிதுனஞ் சித்திபெறுந் தக்க நண்டுக் கதிகமழை
கூருஞ் சிம்மம் புவிநடுங்குங் குமரிக் கதிக நலிவாமே.

(இ-ள்) சித்திரை மாசத்தில் சுக்கிரனானவன் உதயமாகினும், அஸ்தமன மாகினும் பெறுவானாகிற் பூமியிற் பயிர்கள் நன்றாய் விளையும். வைகாசி மாசத்திலுண்டாகில் பயிர்கள் பூர்த்தியாய் விளையாது. ஆனிமாசத்தில் வருமாகிற் சகலதானியங்களும் விளையும். ஆடிமாசத்தி லப்படியாகில் அதிகமழை பெய்யும். ஆவணி மாசத்திலாகில் பூமிநடுங்கும்.புரட்டாசி மாசத்திற் பொருந்துமாகில் மிகுந்த வருத்த முண்டாகும் எ-று. (63)

ஆமே கோலி னுடன்றேளுக் கசதி பீடை மிகவுளதாம்
தாமே தனுசு மகரகும்பந் தனக்கே யவனி செழித்தோங்கும்
போமே சகல பிணியதுவும் பொருந்த விளையுந் தானியங்கள்
பூமேற் சேலின் மதியாகிற் பொன்னு மணியு மிலங்கிடுமே.

(இ-ள்) ஐப்பசி, கார்த்திகை இவ்விரண்டு மாசத்திலாகில் பீடையுண்டாகும். மார்கழி, தை, மாசி இம்மூன்று மாதங்களிலாகில் பூமி செழித்து நோய்களகன்று தானியங்கள் நன்றாய் விளையும். பங்குனி மாசத்திலாகில் பொருளும், பூடணமும், தானியமும் பெற்று வாழ்வார்கள் எ-று. (64)

இலங்க மேட மதிபூர்வத் தேற்குமைந்தேழொன்பதுடன்
மலங்கப் பன்மூன் றதையொட்டி வளர்பூ ரணையா மிந்நாளில்
துலங்கவே யிடியு மின்னற் றூற்றலுந் தூற்றுமாகிற்
பலங்கொளு மாரிகாலம் பண்புறப் பெய்யுந் தானே.

(இ-ள்) சித்திரை மாசத்தில் வருஞ் சுக்கிலபட்சப் பஞ்சமி, சப்தமி, நவமி, திரயோதசி, பௌரணை இத்திதிகள் வரும் நாட்களில் இடி, மின்னல், தூற்றல் முதலானவை தோன்றுமாகில் பின் வரும் மழை காலத்தில் அதிகமாகப் பெய்யும் எ-று. (65)

தாறு மேட மிடபமதி தன்னிற் குடக்கில் விற்போடில்
மேனாள் வருகுங் காலமதில் மிகவுந் தாரை பெய்திடுமாம்
கோனுங் கொறியின் மதியிவுலி குலவிக் கதிரோ னுறுங்காலம்
வானுஞ் சிறிது மழைதூறில்வருகுமுலகில்விபத்ததுவே.

(இ-ள்) சித்திரை, வைகாசி இவ்விரண்டு மாதங்களிலும் மேற்குத் திக்கில் இந்திர தனுவாகிய வில்லிட்டிருந்தால் பின்வரப்போகிற மழை காலத்திலதிகமாகப் பெய்யும். சித்திரை மாசத்தில் அசுவனி நட்சத்திரத்திற் சூரியனானவனிருக்குஞ் சமயத்தில் தூற்றல் தூறில் பூமியிற் சேமமில்லாதிருக்கும் எ-று. (66)

உலகி லிடப மதியதனி லுதிக்கும் பூர்வ பக்கஞ்சேர்ந்
திலகு மொன்று பத்துப்பன் மூன்றுந் திதியுமெய்திடுநாள்
சலமும் பொருமி யிருக்கும்வான் றக்க வில்லு மிடுமாகில்
நலமா மடுத்தே வருங்காலம் நாட்டின் மழையும் பெய்திடுமே.

(இ-ள்) வைகாசி மாசத்தில் வருஞ் சுக்கிலபட்சப் பிரதமை, தசமி, திரயோதசி, இத்திதிகள் பொருந்து நாட்களில் சூற்கொண்டிருக்குபோது மேகத்தில் விற்போட்டால் பின்னால் வரக்கூடிய மழை காலத்தில் அதிகமாகப் பெய்யும் எ-று. (67)

பெய்யு மிதுன மதியதனிற் பிறங்குங்கன்னி கோனகமுஞ்
செய்யச் சுளகா மிந்நாளிற் றேசாய் வான மாசின்றி
துய்ய வடிவாய்த் தானிருக்கிற் சொல்லுஞ் சிம்மங் கன்னிமதி
உய்ய வுதக மிகப்பெய்து முலகஞ் செழிக்கு மெனப்பகரே.

(இ-ள்) ஆனி மாசத்தில், சித்திரை, சுவாதி, விசாகம் இந்த நட்சத்திரங்கள் வருகின்ற நாட்களில் ஆகாயத்தில் மேகங் கூடாமல் பரிசுத்தமாக விருக்குமானால் ஆவணி, புரட்டாசி இந்த இரண்டு மாதங்களிலும் எதேஷ்டமாக மழை பெய்யும் எ-று. (68)

பகருந் தண்டின் மதிவளரும் பக்க மைந்தாந் திதிகாலை
இகலும் வானங் குமுறலுட னேற்ற வுச்சி மேகமதுந்
தொகல வில்லு மந்தியுறச் சோங்காங் கழனி விதைவிதைக்கிற்
சுகமா மொன்றுக் கேமூன்று தோன்ற விளைவு முண்டாமே.

(இ-ள்) ஆனி மாதஞ் சுக்கிலபட்சப் பஞ்சமித்திதி வருந்தினத்தன்று காலையில் குமுறவும், உருமத்தில் மேகங் கூடவும், மாலையில் விற்போடவுங் கண்டால் அக்கணம் விதை விதைக்கவும். அவ்விதம் விதை விதைத்தால் ஒன்றுக்கு மூன்று பங்கு விளைவுண்டாம் எ-று.

உண்டா மிதுன மதியதனி லுற்ற வம்மா வசிக்குப்பின்
பண்டாஞ் சகடம் வருநாளிற் பரவி மேகந் தான்கூடக்
கண்டா லதிக மழைபெய்யுங் ககன முகிலுஞ் சேராதேல்
அண்டா தால மிப்புவியி லதனுல் வெப்ப முண்டாமே.

(இ-ள்) ஆனி மாசம் அமாவாசைக்குப்பின் வருகிற ரோகிணி நட்சத்திரத்தன்று மேகங் கூடினுல் அதிகமான மழை பெய்யும். அவ்வித மேகங் கூடாவிடில் மழை யின்றி காங்கை யதிகப்படும் எ-று. (70)

ஆமே தண்டி லமரபக்கத் தலது வளரும் பக்கமதிற்
ருமே வருமே காதசியிற் சாருங் குடக்கில் வில்லதுவும்
பூமே விடுகத் திரயதசிப் புயலும் வருணன் றிசையுதித்துப்
போமே யாகிற் றென்றிசையிற் பொருந்த வானம் பெய்திடுமே.

(இ-ள்) ஆனி மாசம் அமாவாசைக்குள்ளாவது அல்லது பூர்வ பக்ஷம் ஏகாதசியன்ருவது மேற்குத் திசையில் விற்போடுமாகில் அதற்கடுத்துவரும் திரயோதசித்திதியில் ஷை மேற்குத் திக்கில் மேகங்கூடி அங்கிருந்து தெற்குத் திசையை நாடியோடுமெனில் அக் காலத்தி லதிகமாக மழை பெய்யும் எ-று. (71)

பெய்யும் வீணை மதியதனிற் பிறங்கு மம்மா வசிக்குப்பின்
பய்ய வருகு முதற்றிதியும் பானு வார மற்பமழை
துய்யச் சோம வாரமெனிற் ருேன்று முதக மதிகமதாம்
தெய்யுஞ் செவ்வாய் புந்திக்குத் தேகபீடை சேர்ந்திடுமே.

(இ-ள்) ஆனி மாசம் அமாவாசை கழித்தப் பூர்வபக்ஷப் பிர தமைத் திதியானது ஞாயிற்றுக்கிழமை வரில் அற்பமழை. திங்கட் கிழமை வரில் அதிக மழை. செவ்வாய்க்கிழமை வரில் பஞ்சம். புதன்கிழமை வரில் வியாதி பீடிதம் எ-று. (72)

சேரும் பொன்னன் வாரமுறிற் சேமம் வெகுவாய்த் தான்பெருகும்
நேருஞ் சுங்கன் வாரத்தில் நீண்ட தாரை யுண்டாகும்
பாரும் பங்கு பாதனெனிற் பலமா மாந்தர் திரண்டடர்ந்து
சாருங் கலகந் தான்புரிந்து தயங்கி மெலிவுற் றிருப்பாரே.

(இ-ள்) வியாழக்கிழமை வரில் நாலாவிதத்திலு மேலான சேமமுண்டாகும். வெள்ளிக்கிழமை வரில் பெருமழை அருமையாகப் பெய்யும். சனிக்கிழமை வரில் மனிதர்கள் சினங்கொண்டு இனமெனக் கருதாது வினைவலியால் ஒருவருக்கொருவர் சண்டையிட்டு தளர்ச்சியும் வளர்ச்சியுமின்றி சரீர மெலிவுற்றிருப்பார்கள் எ-று. (73)

பார்க்கத் தண்டு பத்தினிலும் பகரு மலவனெட்டினிலும்
ஏர்க்கக் கடுவ னைந்தினிலு மியலுங் கன்னி நான்கினிலும்
தீர்க்க வணிக னிரண்டினிலுந் திடமாந் தெறுக்கா லொன்றினிலும்
மார்க்க முதகஞ் சிறிதுறிலம் மாத முழுதும் பெய்திடுமே.

(இ-ள்) ஆனி மாசம் பத்தாந் தேதியிலும், ஆடி மாசம் எட்டாந் தேதியிலும், ஆவணிமாசம் ஐந்தாந் தேதியிலும், புரட்டாசி மாசம் நாலாந் தேதியிலும், ஐப்பசி மாசம் இரண்டாந் தேதியிலும், கார்த்திகை மாசம் முதற்றேதியிலும் கொஞ்சந் தூற்றல் தூறினால் அம்மாத முழுவதும் நன்றாக மழை பெய்யும் எ-று. (74)

இடுகக் கடக மதியொருநா ளியங்கு முச்சி தனில்மேகங்
கடுகிக் கூட வந்திபரி வேடங் காணக் காசினியிற்
றொடுகக் கோலுந் தேள்வில்லுஞ் சொல்லு மிந்த மதிமூன்றும்
விடுகா தடுத்து நன்மாரி மேலும் பெய்யு மெனச்சொல்லே.

(இ-ள்) ஆடி மாசத்தில் ஒருநாள் உருமத்தில் மேகங்கூடவும் மாலை நேரத்திற் பரிவேடம் போடவுங் கண்டால் ஐப்பசி, கார்த்திகை, மார்கழி இந்த மூன்று மாதத்திலும் மென்மேலும் எதேட்டமாக மழைபெய்யும் எ-று. (75)

சொல்லு மலவன் மதிவருகுந் தூய வம்மா வசியன்று
வெல்லு மேகங் கூடுமெனில் விரும்பிமழையும்பெய்யாது
புல்லும் புயலும் பொருந்தாதேற் பொழியு முதக மதிகமதாய்
அல்லை நிகர்த்த குழலணங்கே அறிவா யிந்த விதந்தானே.

(இ-ள்) ஆடி மாசத்தில் வருகும் அமாவாசியன்றைய தினம்

ஆகாயத்தில் மேகமானது கூடியிருந்தால் அந்த மாதத்தில் மழை பெய்யாது அவ்விதம் மேகமானது கூடாதிருக்கில் அந்த மாதத்தில் அமோகமாக மழை பெய்யுமென்று இருட்டுக்கொப்பாகிய கூந்தலையுடைய பெண்ணே நீ தெரிந்து கொள்வாயாக எ-று. (76)

விதமாங் கடக மதிபூர்வ மேவு நவமி நாட்காலை
உதயன் புயலின் மறையாம லுற்றே யிருக்க வுருமமதில்
இதமாய் மேகந் தனிற்கூடி யிருக்க வத்த மனகாலம்
பதமாய் முகிலி னுடனேகப் பாரி லாலி பெய்திடுமே.

(இ-ள்) ஆடி மாசம் சுக்கில பட்சத்தில் வருகின்ற நவமித் திதியன்று காலையிற் சூரியன் மேகத்தில் மறையாமற் பரிசுத்தமாய் பிரகாசிக்கவும், உச்சி நேரத்தில் அச்சமில்லாது வானில் மேகத்தோடு கூடியிருக்கவும், அத்தமனமாகுஞ் சமயத்தில் மேகத்துடனே செல்லில் இப்பூமியில் அதிகமாக மழை பெய்யும் எ-று. (77)

பெய்யு நண்டு மதிபூர்வம் பிறங்கு மொன்பான் றிதிசுடரும்
அய்ய மின்றி யொன்றாக வணுகப் பின்னுற் சொரியுண்டாம்
வய்யம் பூர்வ பஞ்சமியும் வருகு மாதி வாரமெனில்
துய்ய வந்த வருடமதிற் றோன்று முதக மற்பமதே.

(இ-ள்) ஆடிமாசம் சுக்கில பட்சத்தில் வருகின்ற நவமித் திதியிற் சுவாதி நட்சத்திரஞ் சேர்ந்து வருமாகில் முன் மழையன்றி பின் மழையுண்டாம். மேற்படி மாசம் மேற்படி பட்சத்தில் வருகின்ற பஞ்சமித் திதியானது ஞாயிற்றுக்கிழமையுடன் சேருமாகி லந்த வருடத்தில் அற்ப மழையாகப் பெய்யும் எ-று. (78)

அற்பங் கடக மதியம்மா வாசை யதிலும் பூரணையிற்
பொற்பா நகர்க்குப் புறம்பேகிப் பொருந்த வனலிற் றாபமிடில்
நற்பல மறியத் தூம நாடிடச் சுரேசன் றிக்கி
லுற்பவப் பயிர்க ளெல்லா மோங்கியே விளையு மென்னே.

(இ-ள்) ஆடி மாசம் அமாவாசையிலாகிலும் பௌரணையிலாகிலும் சோதிடனானவன் ஊருக்கு வெளியிற் பரிசுத்தமாகிய நிலத்தி

விருந்துகொண்டு நெருப்பில் விருப்பமாகச் சாம்பிராணியைப் போட்டுப் பார்க்கவும் அவ்விதம் போட்டுப் பார்க்குங் காலத்தில் அப்புகையானது கிழக்குத்திசையை நோக்கிச் செல்லுமாகில் அவ்வருடத்தில் உற்பத்தியாகும் பயிர்களெல்லா மோங்கி வளர்ந்து ஒட்டிக்கிரட்டியாக விளையும்படிக் கதிக மழை பெய்யுமென்று சொல்வாயாக எ-று. (79)

என்னவக் கினியின் றிக்கி லேகிடிற் புவியிற் சேமம்
நன்னய வியமன் றிக்கில் நாடிடி லுதக மில்லை
சொன்னதோர் நிருதி திக்கிற் சுகமிலை யாலி யற்பம்
இன்னமும் வருணன் றிக்கி லியங்கிடில்விளைவுண்டாமே.

(இ-ள்) மேற்சொன்ன விதமாக இட்டப் புகையானது தென் கிழக்குத் திசையை நோக்கிச் செல்லுமாகில் பூமியிலதிகச் சேமமுண்டாகும். தெற்குத் திசையிற் போகுமாகில் மழை யில்லை. தென் மேற்குத்திசையிற் போகுமாகில் சௌக்கியமும் மழையு மற்பமாம். மேற்குபக்கத்தி லேகுமாகில் நஞ்சைபுஞ்சைகளி லிட்ட பயிர்கள் நல்ல விளைவுண்டாம் எ-று. (80)

உண்டாம் வாயு திக்கதனி லோங்கும் விட்டிற் கிளிகொசுவாற்
பண்டாம் பயிர்கள் சேதமுறும் பகரு மளகைப் பதிதிக்கிற்
கண்டாங் கெய்திற் சுபிட்சமுறுங் கருதி யீசா னியத்திசையில்
வண்டார் குழலே சென்றக்கால் மழைபெய்தோங்குஞ் செந்நெல்லே.

(இ-ள்) வடமேற்கு திக்கிற்செல்லுமாகில் அவ்வருடத்தில் விட்டில், கிளி, கொசுக்களால் விளையும் பயிர்கள் சேதத்தையடையும். வடக்குப் பக்கம் போகுமெனில் புவியிற் சேமம் பொருந்தி வாழ்வார். ஈசானியத் திசையிலேகுமாகில் வண்டுகள் மொய்க்கும் மலர்கள் நிறைந்த கூந்தலையுடைய பெண்ணே நல்லமழை பெய்து செந்நெல் மிக்கச் செழிப்பாக விளையும். எ-று. (81)

நெல்லும் பெருகுஞ்சிம்மமதி நிகழுமுதலாந்தினத்தன்று
புல்லு மேகக் கற்சிதறும் பொருந்து மின்னலுண்டாகில்
வல்லக் கோலின் மதிமட்டு மழையும் பெய்யு மொன்றஞ்சு
செல்லும்வரைக்குமின்னலடிசேரின்மேற் சொற்பலனுமே.

(இ-ள்) ஆவணிமாசம் முதற்றேதி யன்று மேகங் குமுறினும் மின்னினும் ஐப்பசி மாசம் கடாசிவரை அதிகமாக மழை பெய்யும் அன்றியும் இம்மாதம் முதற்றேதிமுதல் ஐந்தாந்தேதி வரைக்கும் நித்தியமும் குமுறல், மின்னலுண்டாகில் மேற்சொன்னபடி யதிக மாக மழைபெய்யும். எ. று. (82)

பலனுங் கன்னி மதிவருகும் பயறும் பதுமம் வைகாசி
நலமா மிந்த நாட்களதில் நாடித் தூறல் தூறுமெனில்
புலமும் நிலமும் விளைவதற்குப் பொருந்த மேகஞ் சாந்தமதாய்க்
குலவு முதகம் பெய்ததிகக் குணமு மணமு மோங்கிடுமே.

(இ-ள்) புரட்டாசி மாதத்தில் வருகின்ற சித்திரை, சுவாதி, விசாகம் இந்த மூன்று நட்சத்திரங்களில் தூற்றல் தூறுமாகில் புஞ்சை நஞ்சைகளில் இட்ட பயிர்கள் பூரணமாக விளைவதற்கு சாதகமாகவும் மழை பெய்து பூமியிலுள்ளவர்கள் நல்ல குணமும் சுகந்த வாசனைப் பிரியமு முள்ளவர்களாக இருப்பார்கள் எ-று. (83)

ஓங்குங் கன்னி மதிபூர்வத் தொன்பான் பத்துப் பன்னொன்றும்
பாங்காந் திதியிற் றூறுமெனிற் பலிக்கும் பின்னு லுதகமதுஞ்
சோங்காம் நான்காந் தேதிமழை தூற்றி லந்த மதிமுழுதும்
நீங்காத் தாரை பெய்துபயிர் நீண்டு விளையு மெனச்சொல்லே.

(இ-ள்) புரட்டாசி மாசம் பூர்வபட்சம், நவமி, தசமி, ஏகாதசி இந்தத் திதிகள் வருகின்ற நாட்களில் தூற்றல் தூறுமாகில் முன் மழை யின்றிப் பின் மழையுண்டாம். மேற்படி மாசம் நாலாந் தேதி யில் தூற்றல் தூறினால் அந்த மாதங் கடாசி வரையிலும் விடா மழை பெய்து பயிர்களானவை யோங்கி வளர்ந்து செழிப்பாக விளையுமெனச் சொல்வாயாக எ-று. (84)

சொல்லக் கோலின் மதிமுதலாய்த் துலங்கும்வில்லின் மதிவரைக்கும்
மெல்ல வருகுஞ் செங்கதிர்நாள் மேவு முதய காலமெலாம்
வல்லச் சண்டன் றனைமேக மறைக்கக் காரி தினந்தோறும்
புல்ல வந்தி தனிற்சூழப் பொழியு மாலி தினமெட்டே.

(இ-ள்) ஐப்பசி, கார்த்திகை, மார்கழி இந்த மூன்று மாதங்

களில் வருகின்ற ஆதிவாரங்கடோறுங் காலையிலும் மேற்படி மாதங் களில் வரும் சனிக்கிழமைகடோறும் மாலையிலும் சூரியனை மேக மானது மறைக்குமானல் எட்டுநாளைக் கிடைவிடாமல் மழை பெய் யும் எ-று. (85)

எட்டாஞ் செட்டி மதிமுதலாம் பக்கமெய்து முதற்றிதியு
மெட்டாந் திதியும் வருநாளி லினிய தூறற் சிறிதேனு
மட்டாய்த்தூறிற் றேள்மதியின் மட்டா யாலி மிகப்பெய்து
கட்டாங் குளமு நிறைந்துகதிர் கனத்தே விளையு மென்றிடுமே.

(இ-ள்) ஐப்பசி மாசம் பூர்வபட்சம் பிரதமை, அட்டமி இந்த இரண்டு திதிகளி லோர் திதியானது வருகின்ற நாட்களிற் கொஞ்ச மேனுந் தூற்றல் தூறுமாகில் அத் தேதிமுதல் கார்த்திகை மாசம் முப்பதாந் தேதிவரைக்கும் நல்ல மழை பெய்து, குளங், கிணறு, கண்வாய் முதலானவைகள் நீர் நிறைந்தும் கதிர்க ளோங்கி வளர்ந்து அதிகப் பொலிவு காணும்படி விளையுமென்பாயாக எ-று. (86)

என்ற வணிகன் மதியமரத் தேற்கு மைந்தாந் திதியுருளை
நன்ற தேழாந் திதிசெங்கை நவமி கொடிறு மொன்ருக
குன்ரு தம்மா வசிதீபங் குலவ வந்த வருடமதி
லொன்ற வெந்த மதியுங்கெற் போட்ட மிரத்த மயமாமே

(இ-ள்) ஐப்பசி மாசம் அமரபட்சம் பஞ்சமித்திதியும், உரோ கணி நட்சத்திரமும், சப்தமித்திதியும், திருவாதிரை நட்சத்திரமும், நவமித்திதியும், பூச நட்சத்திரமும், அமாவாசியும், சுவாதி நட்சத் திரமும் மேற்சொல்லிய திதிகளும், நட்சத்திரங்களும் ஒரு தினத் திற் சேர்ந்து வருமாகில் அந்தந்த மாதங்களுக்குரிய கெற்போட்ட மானது இரத்த நிறமாகும் எ-று. (87)

மயமா நிறையின் மதிவருகு மதிநாள் மேகங் கூடிடினும்
நயமாங் குருநாட் காற்றடிக்க நவிலும் பணிநாள் மின்னலுற
பயமொன் றில்லா மேற்சொன்ன பாங்கா மிரத்த வடிவின்றி
வயமாம் நன்னீ ருதகமதாய் மண்ணிற் பெய்யு மெனப்பகரே.

(இ-ள்) ஐப்பசி மாசத்தில் வருகின்ற மிருகசீரிட நட்சத்திரத் தன்று மேகங் கூடினாலும், பூச நட்சத்திரத்தன்று காற்றுண்டானாலும் ஆயிலிய நட்சத்திரத்தன்று மின்னலுண்டானாலும் முன் சொல்லிய விரத்தநிறமாறி இயற்கையின்படி சுத்தசலமாக மழைபெய்யுமென்று சொல்வாயாக எ-று (88)

பகருங் கோலின் முதற்றேதிப் பாங்காய்த் தூற்றற் றாறுமெனில்
அகலு மந்த வருடமதி லற்ப மேனும் பெய்யாது
மிகவு மிரண்டாந் தேதியதில் மேகந் தூறி லவ்வாண்டில்
பகலு மிரவு மோர்நிறையாய்ப் பாரி லாலி சொரிந்திடுமே.

(இ-ள்) ஐப்பசி மாசம் முதற்றேதியன்று தூற்றல் தூற்றுமாகில் அந்த வருடத்திற் கொஞ்சங்கூட மழை பெய்யாது. மேற்படி மாசம் இரண்டாந் தேதியில் தூற்றல் தூறுமானால் அவ்வருஷத்தில் பகலும், இரவும் சமமாக இப்பூமியில் மழை பெய்யும் எ-று. (89)

சொரியுந்தேளின் மதியதனிற் றேன்றும்நல்லபூரணையிற்
பரியுங் கூடி வருமாகிற் பாரிற் கலகம் பெரிதாகும்
விரியுங் கங்கு லாமாகில் மேவுங் கண்ட வருடமதாம்
அரிய வாணன் றுனுதிக்கி லாலி பின்னு லுண்டாமே.

(இ-ள்) கார்த்திகை மாசப் பௌரணையன்று அசுவனி நட்சத்திரஞ் சேர்ந்துவருமாகில் உலகத்திற் கலகமுண்டாகும். மேற் சொல்லிய பௌரணையோடு பரணி நட்சத்திரங் கூடுமானால் ஆங்காங் குப்பாங்கின்றி ஓரிடம்விட் டோரிடத்தில் மழை பெய்யும். மேற் கண்ட பௌரணையுடன் கார்த்திகை நட்சத்திரங் கலந்து வருமாகில் முன் மழை யின்றி பின் மழை யுண்டாம் எ-று. (90)

உண்டாங் கீட மதிபவ்வ முறுகுந் திகதி யகவிலையும்
கண்டாங் கந்தப் படிநிலவுங் காணுந் தனுவின் மதிவருகும்
பண்டாம் பொய்கை தனிற்கதிரோன் பற்றுங் கால முதற்கொண்டு
துண்டா யம்மம் மதிக்குற்ற றூலிற் கிரம மோங்கிடுமே.

(இ-ள்) கார்த்திகை மாதப் பௌரணையானது எத்தனைந் தேதி

வருகிறதோ அத்தனைப் படி யகவிலை விற்கும். மார்கழி மாசம் பூராட நட்சத்திரத்தில் சூரியன் பிரவேசிக்குந் தினமுதலாக அந் தந்த மாதங்கட்குரிய ஈவு நாட்கள் நாழிகையின்படிப் பிசகாமற் கெற்போட்ட மோடுமாகில் அந்தந்தக் காலத்தில் அதிகமாக மழை பெய்யும் எ-று. (91)

ஓங்குந் தனுவின் மதியதனி லுற்ற தசமாந் திகதிமுதற்
பாங்கா மிருபத் தேழுவரைப் பரிவே டந்தா னிட்டாலும்
சோங்காஞ் செங்கை முதலவுணன் ஞெடரும் வரைவே டங்காற்று
வாங்காக் குமுறு மாகிலந்த வருட மெல்லாம் பொழிந்திடுமே.

(இ-ள்) மார்கழிமாசம் பத்தாந் தேதிமுதற்கொண்டு இருபத் தேழாந்தேதி வரை பரிவேடம் போட்டாலும், அல்லது திருவாதி ரை, புநர்பூசம், பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுசம், கேட்டை, மூலம் இந்தப் பதினன்கு நட்சத்திரங்கள் வருந் தினங்களில் மேகங் கர்சித்தல், பரிவேடம், காற்று முதலியவை யுண்டானல் அவ்வருடாந்தியம் வரை நல்ல மழைபெய்யும். எ-று. (92)

பொழியு மகர மதிமுதலிற் பொருந்து நாலாந் திதியன்று
வழியாய் மின்னலுண்டாக வலது மேகங் கூடவன்றிப்
பழிய தின்றி விந்திரதனுப்பாங்காயுறினுங்குமுறிடினும்
அழியா வேட மிட்டிடினுமதுவே கெற்போட்டமதாமே.

(இ-ள்) தைமாசம் பூர்வபட்ச சதுர்த்தித் திதியன்று ஆகாயத் தில் மின்னலுண்டாகினும், அல்லது மேகங்கூடினும், அஃதன்றி இந்திரதனுசுண்டானலும், அதுவன்றி மேகங் கர்ச்சித்தாலும், அது வில்லாமற் பரிவேடமிட்டாலும், கெற்போட்ட காலத்திற் கெற் போட்டமில்லாவிட்டாலும் இதுவே கெற்போட்டமாம். எ-று. (93)

ஆமே மகர மதிபவ்வத் தன்று சந்தி காலமதிற்
ருமே பஞ்சதொருபலத்தைத்தனியேவைத்து மறுநாளில்
நாமே பிழிய நெல்லிடைதா னல்ல சலம திருக்குமெனிற்
பூமே லத்த வருடமதிற் பொழியு முதக மதிகமதே.

(இ-ள்) தைமாசப் பவரணையன்று சாயந்திரம் ஒரு பலம் பஞ் செடுத்து வெளியில் வைத்திருந்து மறுநாட் காலையில் அப்பஞ்சைப் பிழிந்து பார்க்கையில் ஒரு நெல்லிடை சுத்தமாகிய பனிசலமிருந் தால் அவ்வருடத்தில் உலகமதிலதிகமாக மழைபெய்யும் எ-று. (94)

அதிகங் கும்ப மதியதனி லாகுங் கலப்பை நான்கதனிற்
பதியு மாதி தெற்காகும் பகரும் வடக்குப் பிர்மா வாம்
ததியா மதற்கு வடக்குசுரர் தனக்கு வடக்கு மசுரர்களாம்
விதியா மிந்த முறையுணர்ந்த மேலும் பலனைச் சொல்வேனே.

(இ-ள்) மாசிமாசம் வருகும் மக நட்சத்திரத்தினுருவம் நான் கில் தெற்குப்பக்க மிருக்கின்றதற்கு ஆதி நட்சத்திர மென்றும், அதற்கு வடக்கிலிருக்கின்றதற்கு பிர்ம நட்சத்திர மென்றும், அதற்கு வடக்கிலிருக்கின்றதற்கு ராட்சத நட்சத்திர மென்றும், பெயராம். இதனைத் தெரிந்துகொண்டதின்பின் னதனாலேற்படும் பலனைச் சொல்வேன். எ-று. (95)

சொல்வே னுன்கு தனக்குமதி சூழத் தெற்கிற் போகிலொன்றும்
புல்ல வொன்று தெற்காகிற் பொருந்துமுக்காற்பலமாகும்
நல்ல வுபயந் தெற்காகில் நாடும் பாதிப் பலனாகும்
வெல்ல மூன்று தெற்காகில் விளங்கு நான்கி லொன்றதுவே.

(இ-ள்) மேற்சொன்ன நாகத்தடிபோன்ற மக நட்சத்தி னுருவம் நான்கினுக்குஞ் சந்திரனனவன் தெற்கே போவானாகில் முழுவெள்ளாண்மையும் ◡○○○○ சந்திரனுக்கு ஒரு நட்சத் திரந் தெற்காகில் முக்கால் வெள்ளாண்மையும். ○◡○○○ இரண்டுநட்சத்திரந் தெற்காகில் அரை வெள்ளாண்மையும் ○○◡○○ மூன்று நட்சத்திரந் தெற்காகில் கால் வெள்ளாண் மையுமாம். ○○○◡○ எ-று. (96)

ஒன்றாய் நான்கு மெமதிசையிலோடிற்சுபிட்சமிலையென்க
நன்றாங் கும்ப மதிபூர்வம் நாடு மேழாந் திதிவானில்
குன்றா மேகங் கூடவன்றிக் குலவும் பன்மூன் றுந்திதியி
னன்றா மின்னற் குமுறலுமுண் டாகி லாலம்பெய்திடுமே.

(இ-ள்) மேற்சொன்னபடி சந்திரனுக்கு தெற்கே நான்கு நட்சத்திரமும் போகுமாகிற் பஞ்சமாம். மாசிமாசச்சுக்கில பட்சசப்தமித் திதியில் ஆகாயத்தில் வாகர்கமேகங்கூடினாலும் அல்லது திரயோதசித் திதியில் மின்னலாவது குமுறலாவது உண்டாகில் மழையதிகமாகப் பெய்யும். எ-று. (97)

பெய்யும் பொய்கை முதலேழும் பிறங்குங் கன்னி முதன்மூன்றும்
உய்யுந் தூற்ற லுண்டாகி லுலகி லாலி மிகச்சொரியும்
பய்யச் சேலின் மதிபூர்வ பக்க மேழாந் திதிபவ்வத்
துய்ய மேகங் கூடவன்றித் துடர்காற் றடிக்க மிகநன்றே.

(இ-ள்) மேற்சொல்லிய மாசிமாதத்தில் வரும் பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி இவ்வேழு நட்சத்திரத்திலாவது, அல்லது சித்திரை, சுவாதி, விசாகம் இம்மூன்று நட்சத்திரத்திலாவது தூற்றல் தூறினால் அக்காலத்தி லதிக மழை பெய்யும். பங்குனி மாதச் சுக்கிலபட்ச சப்தமித் திதியிலாவது பௌரணையிலாவது ஆகாயத்தில் மேகங்கூடினாலும் அல்லது காற்றடித்தாலும் பயிர்கள் விளையும்படியான மழை பெய்து மாந்தர்கள் சுகமடைவார்கள் எ-று. (98)

நன்றாஞ் சேலின் மதியதனில் நவிலு மிருநான் காந்திகதிக்
குன்றாத் தூற்ற லுண்டாகிற் குலவி யடுத்துவரும்வருடத்
தன்றும் பயிர்கள் விளைவுண்டா யகில மெங்குஞ் செழித்தோங்கிக்
கன்றுங் காலி மேய்வதற்குக் கனபுல் லுண்டா மெனச்சொல்லே.

(இ-ள்) பங்குனி மாசம் எட்டாந் தேதியன்று தூற்றல் தூறுமாகில் அதற்கடுத்த வருட மழைகாலத்திற் பயிர்களானவை செழித்தோங்கி விளையும்படியான மழை பெய்து மாடுகன்றுகள் மேய்வதற்கேற்றப் புற் பூண்டுக ளுண்டாம் எ-று. (99)

சொல்லுஞ் சிம்ம மதியதனிற்றொடருமாறுந் திகதிப்பின்
புல்லுஞ் சிம்ம முழக்கமுறிற் புவியி லதிக விளைவாகும்
வெல்லு மகர நாட்கதிரை மேக மறைக்கில் விளைவுண்டாம்
நல்ல வெயிலு மெரித்தாக்கால் நாட்டி லனலும் பறக்குமெனே.



(இ-ள்) ஆவணி மாசம் பூருந்தேதிக்கி மேலாக மேக கர்ச்சனை யுண்டானால் நாட்டிற் பயிர்கள் விளையும்படியான மழை பெய்யும். அன்றியும் மேற்படி மாசத்தில் வருகிற மூலநட்சத்திரத்தன்று சூரியனை மேகமானது மறைக்கிற் சகல தானியங்களு மிகுதியாக விளையும். அவ்வாறு சூரியனை மேகமானது மறைக்காவிடில் இப்புவியெங்கும் வெப்ப முண்டாமெனச் சொல்வாயாக எ-று. (100)

என்னச் சிம்ம மேடந்தே ளியங்கு சேல்வில் லிம்மதியிற்
றுன்ன வுடுக்க ளுதிருமெனிற் சுகஞ்சே ரரசர்க் காகாவாம்
சொன்ன நண்டு கும்பங்கோற் றேன்ற நவதா னியக்குறைவாம்
முன்ன மிதுன மதியுதிரில் மொழியு மமைச்சர்க் காகாதே.

(இ-ள்) ஆவணி சித்திரை கார்த்திகை பங்குனி மார்கழி இவ்வைந்து மாதங்களில் நட்சத்திரங்களுதிருமாகில் தேசத்ததிபர்க்குப் பீடையாம். ஆடி மாசி ஐப்பசி இம்மூன்று மாதங்களில் நட்சத்திரங்களுதிருமாகில் ஒன்பது தானியங்களுங் குறைவாகும். ஆனிமாதத்தில் நட்சத்திரங்களுதிருமாகில் மதியறிந்துரைக்கும் மதிவல்லவர்க் காகாவாம் எ-று. (101)

ஆகாக் கன்னி மதியுதிரி லவனி யோர்க்கு நோயுண்டாம்
வாகா மிடப மதியாகில் வான மாரி பெய்யாது
பாகாம் நண்டு மதிவருகும் பண்பாங் கூவ லுதயத்திற்
றேகாய்க் குணக்கின் காற்றடிக்கிற் சொரியும் பின்னுட் பெய்திடுமே.

(இ-ள்) புரட்டாசி மாசத்தில் நட்சத்திரங்களுதிருமாகில் உலகத்துள்ள மனிதர்களுக்குப் பீடையாம். வைகாசி மாசத்தில் நட்சத்திரங்களுதிருமாகில் மழை பெய்யாதாம். ஆடி மாசத்தில் வருகின்ற உத்திராட நட்சத்திரத்தன்று கிழக்குத்திசையிலிருந்து காற்றுண்டாகுமாகில் முன் மழையின்றிப் பின் மழையுண்டாம் எ-று. (102)

பெய்யும் வன்னி யுடனியமன் பிறங்குந் திசைக்காற் றடிக்குமெனில்
வெய்ய கலகப் பஞ்சமுறும் மேவும் நிருதிக் காற்றடிக்கிற்
செய்யும் பயிர்கள்விளையாதுதிடமாமளகைப்பதிவருணன்
உய்யுந் திசைக்காற் றடிக்குமெனி லுதக மதிக முற்றிடுமே.

(இ-ள்) தென்கிழக்குத் தெற்கு இத்திசைகளிலிருந்து காற்றுண்டாகுமாகிற் கலகமும், பஞ்சமும், நேரிடும். தென்மேற்குத் திசையிலிருந்து காற்றுண்டாகுமாகில், புஞ்சை, நஞ்சைகளிற் போட்டபயிர்கள் விளையாது. வடக்கு மேற்கு இவ்விரண்டு திசைகளிலிருந்து காற்றுண்டாகுமாகில் மழையதிகமாகப்பெய்யும் எ-று.(103)

இடுமே வாயு காற்றடிக்கி லெழிலாம் விலங்கு புழு விட்டிற்
கொடுமை யதிக முண்டாகுங் குலவு மீசா னியத்திசையிற்
கடுமைக் காற்று வீசுமெனிற் கனத்த மழையு முன்பெய்யும்
அடுமே பவ்வஞ் சேருமெனி லடுக்கு முதக மிகத்தானே.

(இ-ள்) வடமேற்குத் திசையிலிருந்து காற்றுண்டாகுமாகில், அவ்வருடத்தில், மிருகங்களாலும், புழுக்களாலும், வெட்டுக்கிளிகளாலும் பயிர்களுக்குச் சேதமுண்டாகும். வடகிழக்குத் திசையிலிருந்து காற்றுண்டாகுமாகில் முன்மழைபெய்யும் இத்துடன் பவரணையுஞ் சேர்ந்து வருமாகில் மழையதிகமாகப்பெய்யும் எ-று. (104)

தானுங் கடக மதிபூர்வந் தன்னி லைந்தாந் திதிகதிர்நாள்
வானு மற்ப மழைபெய்யு மதிநாள் வெள்ளமிகப்பெருகும்
வேனுங் குசனுட் சிலுகுண்டா மேதை தனக்குப் பெருங்காற்றுங்
கோனுங் குருவுக் கதிவிளைவு கூறுங்கவிக்குப் பெருமழையே.

(இ-ள்) ஆடி மாசச் சுக்கிலபக்ஷப் பஞ்சமித் திதியானது ஆதிவாரம்வருமாகில் அற்ப மழை பெய்யும். திங்கட்கிழமை வருமாகிற் சலப்பெருக்குண்டாம். செவ்வாய்க்கிழமை வருமாகிற்கலகமுண்டாம். புதன்கிழமை வருமாகில் பிலமான காற்றுண்டாம். வியாழக்கிழமை வருமாகிற் பயிர்க ளதிகமாக விளையும். வெள்ளிக்கிழமை வருமாகில் பெருத்த மழையுண்டாம் எ-று. (105)

பெருகுஞ் சனிக்கு விளைவில்லை பிறங்கு நண்டு மதியதனில்
வருகு மைந்தாந் திகதிபுந்தி வாரமென்னி லோர்போகந்
தருகும் பொன்ன னிருபோகந் தகுஞ்சே யிரவி சாவியதாம்
உருகும் வெள்ளி மதிமழையா முற்ற சனிக்குப் பயிர்கெடுமே.

(இ-ள்) சனிக்கிழமை வருமாகில் பயிர்கள் விளையாதாம். ஆடி மாசம் ஐந்தாந்தேதி புதன்கிழமை வருமாகில் ஒரு போகம் விளையும். வியாழக்கிழமைவருமாகிலிருபோகம் விளையும். ஞாயிற்றுக்கிழமை, செவ்வாய்க்கிழமை வருமாகில் பயிர்கள் விளைவின்றிச் சாவியாய்ப்போகும், வெள்ளிக்கிழமை, திங்கட்கிழமை, வருமாகில் மழையுண்டாம். சனிக்கிழமை வருமாகில் நட்டபயிர்கள் கெட்டுவிடும் எ-று. (106)

கெடுமே தண்டுக் கொன்றரையாங் கிட்டுந் தனுவுக் கொருநாளாம்
தொடுமே நண்டு தேள்வரைக்குஞ் சொல்வா யிரண்டே காலாகும்
விடுமே மகரம் விடைவரைக்கும் விரும்புங் கடிகை யிராசியதாம்
அடுமே பதினு லேழுக்காலாகுந்தினங்கெற்போட்டமதே.

(இ-ள்) ஆனிமாசத்திற்கு ஒன்றரைநாளும் மார்கழிமாசத்திற்கு ஒருநாளும் ஆடி, ஆவணி, புரட்டாசி,ஐப்பசி,கார்த்திகை, இவ்வைந்து மாசத்திற்கும் மாதமொன்றுக்கிரண்டேகால்நாளும். தை, மாசி, பங்குனி, சித்திரை,வைகாசி இவ்வைந்து மாசத்திற்கும் மாதமொன்றுக்கு நாழிகை பனிரண்டாக மாசமைந்துக்குங் கூடிய நாள் ஒன்றும். ஆக பதினுலேழுக்கால் நாட்கள் கெற்போட்டமாம் எ-று. (107)

அதனி லாடிப் பூரணையன் றிரவி லலவன் றனைவேடம்
இதமாய்ப்பத்துநாழிகைக்குளிடுகக்கோலுக்கிருபதுக்குள்
பதமாங் கடிகை முப்பதுக்குட் பகரு மாதந் தேளாகில்
நிதமுந் தனுவிற் சொரிபெய்யு நிசிமுற் றுறமுத் திங்களதே.

(இ-ள்) ஆடிமாசம் பௌரணையன்றிரவிற் பத்துநாழிகைக்குள் சந்திரனைச் சுற்றிப் பரிவேடமிட்டாலும் ஐப்பசி மாசம் மேற்படி தினத்தன்றிரவிலிருபது நாழிகைக்குள் சந்திரனைச்சுற்றிப் பரிவேடமிட்டாலும். கார்த்திகைமாசம் முன் சொல்லியதினத்தன்றிரவில் முப்பது நாழிகைக்குள் சந்திரனைச்சுற்றிப்பரிவேட மிட்டாலும். தைமாசத்தில் அதிகமாக மழை பெய்யும். அன்றியும் மேற்சொல்லிய மூன்று மாசங்களுக்குள்ளோர் மாசப்பௌரணையன்றிரவு முப்பது நாழிகையும் சந்திரனைச் சுற்றிப்பரிவேடமிடுமாகில் அம்மாதந் தொடங்கி அடைமழை பெய்யும் எ-று. (108)

திங்கள் மூன்றும் பிறையதுவுஞ் சேலுங் கொறியுந் தெற்குயரத்
தங்கு மெருது வில்வரைக்குந் தக்க வடக்கிற் றுனுயர
பொங்குங் கும்ப மகரமதிற் பொருந்தச் சமமா யிருக்கநல
மெங்கும் பெருகு மில்லாதே லேற்குங் கலகம் பஞ்சமதே.

(இ-ள்) மாதந்தோறு முதயமாகின்ற மூன்றும் பிறைச்சந்திரனவன். பங்குனி, சித்திரை, இவ்விரண்டு மாதத்திலும் தெற்குப் பக்கத்திலுயர்ந்திருக்க வேண்டும். வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, இவ்வெட்டுமாதங்களிலும் வடக்குப்பக்கத்திலுயர்ந்திருக்கவேண்டும். தை, மாசி, இவ்விரண்டு மாதத்திலும் துலாக்கோல் போலாக இரண்டு பக்கமுஞ்சமமாயிருக்க வேண்டும். இவ்விதமிருக்கில் உலகத்தி லநேகநன்மைகளுண்டாகும். இதற்குப்பேதப்படுமாகிற்சண்டையும் பஞ்சமுமுண்டாம் எ-று. (109)

பஞ்சங் கோலின் மதிசோதிப் பகலன் வருநாட் குணக்கதனில்
மிஞ்சு மின்ன லுண்டாகின் மேவு மதிக வுதகமதாம்
அஞ்சா விடப மதியமரத் தடுக்கும் பதிநான் காந்திதியிற்
கொஞ்சத் தூற்ற லுண்டாகிற் குலவு மதிக மாலியதே.

(இ-ள்) ஐப்பசிமாசம் சுவாதி நட்சத்திரத்திற்சூரியன் சஞ்சரிக்கும் நாட்களில் கிழக்குத்திசையில் மின்னலுண்டாகு மாகில் அக்காலத்தில் அதிகமாகமழை பெய்யும். அன்றியும், வைகாசிமாசம் அமரபட்சச்சதுர்த்தசித்திதியன்று சிறிது தூற்றல் தூறுமாகில் அதிகமாக மழை பெய்யும் எ-று. (110)

அதுவுந் தண்டு நண்டுசிம்ம மான மதியிற் குணதிசையிற்
சதுரா மிந்திர தனுசுமுறத் தானே பஞ்ச முண்டாகும்
விதுவின் கடக மதிபாதி மேவுங் கடிகை மூவைந்திற்
பதுமத் திறைவன் றனேமேகம் பாங்காய் மறைக்கி லுத்தமமே.

(இ-ள்) ஆனி, ஆடி, ஆவணி, இம்மூன்று மாதங்களில் ஓர் மாதத்திற் கிழக்குத்திசையில் இந்திரதனுசு உண்டானல் பாரில் மிக்கப்பஞ்சமாம். ஆடிமாசம் பதினைந்தாந்தேதி பதினைந்து நாழிகைக்குள்

சூரியனை மேகமானது மறைக்குமாகில் அவனியில் அதிக நன்மைக ளுண்டாம் எ-று. (111)

உத்ததேள் மதியிற் பவ்வ மோங்குநா ளடுப்போ டாரல்
பத்தியே கூடு மாகிற் பாரினி லாங்காங் காலி
தொத்திடு மனுவி ருட்டித் தோடமோ டதிக வெப்பம்
நத்திடு மதனாற் கட்டம் நாட்டினி லுண்டா மென்னே.

(இ-ள்) கார்த்திகைமாசப்பவரணையன்று பரணியுங்கார்த்திகை யுஞ் சேர்ந்து வருமாகில் உலகிலெவ்வோரிடத்திற் கண்டவருடமாக மழை பெய்யும். அதனாற் சிற்சில விடங்களில் சுபிட்சமிராது. அன்றியும் பற்பலவிடங்களில் அதிக வெப்பத்தினால் கட்டமுண் டாம் எ-று. (112)

என்னக் கீட மதிபவ்வத் திவுளிபா கெரியுஞ் சேரில்
மின்னிடைச் சிம்மந் தொட்டு விருட்சிக மதிவ ரைக்கும்
நன்னய நாட்டிற் புஞ்சை நஞ்சையி லிட்டி ருக்குங்
கன்னலுஞ் செந்நெற் பாதி கண்டிடும் விளைவென் றோதே.

(இ-ள்) கார்த்திகைமாசப் பௌரணையன்று அசுபதி, பரணி, கார்த்திகை நட்சத்திரங்கள் மூன்றுஞ் சேர்ந்துவருமாகில், ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை இந்த நான்கு மாதங்களிலும் சமரச மாக மழை பெய்து பூமியிற் புஞ்சை நஞ்சைகளில் இட்டியிருக்குந் தானியங்களுங் கரும்பும் சமமாக விளைவுண்டாம் எ-று. (113)

ஓதுந் துடரின் மணிமதியி லுறும்பூ ரணையி லுருளவரில்
மாது மாந்தர் காலிகட்கு மண்ணி லதிகப் பயமுண்டாம்
மீது மேற்சொல் லுந்திதியில் மேவுமாரற் சகடமுறக்
கோது மின்றிச் சமமாகக் குலவு மாலி விளைவாமே.

(இ-ள்) கார்த்திகை மாசப் பௌரணையன்று உரோகணி நட் சத்திரம் வரில் ஆண், பெண், ஆவினங்களுக்கும் அவனியி லதிக பயமுண்டாகும். அன்றியும் மேற்சொல்லிய பௌரணையில், கார்த் திகை, உரோகணி நட்சத்திரங் கூடிவரில் குற்றமில்லாமற் குவலயத் தில் சமமாக மழை பெய்து விளைவுண்டாம் எ-று. (114)

ஆமே கங்கு லுடனுர லதுவு மொருநாள் வந்திடினும்
தாமே வாண னுருளையதுஞ் சார்ந்தோர் தினத்தி லுற்றாலும்
பூமே லரசர்க் கரசரெதிர் பொருதிப் போரும் புரிவார்கள்
போமே பீடையுண்டாகிப் புவியோர் கலகஞ் செய்வாரே.

(இ-ள்) கார்த்திகை மாசத்திற் பரணியுங் கார்த்திகை நட்சத்திரமும் ஒருநாளில் வந்தாலும், அல்லது கார்த்திகையும் உரோகணி நட்சத்திரமும் ஒரு தினத்திற் சேர்ந்தாலும், பூமியையாளுஞ் சாமிகளாகிய ராசராசாக்கள் ஒருவருக்கொருவர் யுத்தகளத்தில் மெத்தவுஞ் சண்டையிட்டுக்கொள்வார்கள். மாந்தர்கள் சாந்தமில்லாமல் ஏந்தலைப் போல கலகமும், நோயும் எய்தப் பெறுவார்கள் எ-று. (115)

செய்யுந் தெருக்கால் மதிபவ்வத் திதியு மறுபா னுழிகையாய்
உய்யு மார லவ்வீத முற்றே யிருக்க வடுத்துவருந்
துய்யக் கடக முதற்கொண்டு துலாத்தின் வரைக்கு முள்ளமதி
வய்யம் பயிர்கள் விளைவதற்கு வளமா யுதகம் பெய்திடுமே.

(இ-ள்) கார்த்திகை மாசத்தில் வருகின்றபௌரணைத்திதியானது அன்றயதினம் பகலிரவு அறுபது நாழிகையும். மேற்படிமாசத்தில் வரும் கார்த்திகை நட்சத்திரம் அறுபது நாழிகையும் பூர்த்தியாயிருக்குமாகில் அதற்கடுத்த வருடத்தில் வருகின்ற ஆடி ஆவணி புரட்டாசி அற்பசி இந்த நான்கு மாதங்களிலும் மழை பெய்து சகல தானியங்களும் செழிப்பாய் விளையும் எ-று. (116)

இடுமே யிடப மதியமரத் தேற்கு மைந்தாந் திதியன்று
அடுமே குபேரன் குணக்குத்திக் கதனிற் புயலுஞ் சஞ்சரிக்கில்
வடுமே யில்லாப் பின்வருகு மாரிக் காலந் தனிலதிகப்
படுமா முதகம் பெய்திந்தப் பாரில் விளைவும் நன்றாமே.

(இ-ள்) வைகாசிமாசம் அமரபட்சப் பஞ்சமித்திதி வருகுந் தினத்தில் வடக்குத் திசையிலும், கிழக்குத்திசையிலும், மேகங்கூடுமாகில் அவ்வருடத்தில் வரக்கூடிய மழைகாலத்தில் அதிக மழை பெய்து சகல பயிர்களும் நன்றாக விளையும் எ-று. (117)

நன்று மிடப மதிசகட நாளிற் சண்டன் சசியுடனே
ஒன்றாய்க் கூடுங் காலமதி லோங்கி யுதகம் பெய்திடவும்
குன்று தொன்று முதல்நான்காங் குலவுந் திதிமட் டிடிகுமுறல்
அன்றுங் குண்டா மாகிலதற் கடுத்த வாண்டிற் சொரிமிகுமே.

(இ-ள்) வைகாசிமாச உரோகணி நட்சத்திரத்தில் அமாவாசை யுஞ் சேர்ந்துவர அன்றையதினம் மழை பெய்தாலும் அதுவன்றி மேற்படி வைகாசிமாசப் பிரதமை துதிகை திரிதிகை சதுர்த்தி இந் நான்கு திதிகள் வருகின்ற நாட்களில் இடி, மின்னல், குமுறல் முதலிய சின்னங்களுண்டாகினும் அதற்கடுத்த வருடமழைகாலத்தில் அதிகமாக மழை பெய்யும் எ-று. (118)

மிகவு மிடப மதியம்மா வசியு மேவுந் தினத்தன்று
பகல னுச்சி யந்தியிலும் பாங்காய் மேகங் கூடுமெனில்
தகமை யுடன்பின் வருங்காலந் தன்னிற் சொரியுஞ் சொரிந்திந்த
செகத்திற்பயிர்கள்விளைந்தோங்கிச்செல்வம்பெருகுமெனச்சொல்லே.

(இ-ள்) வைகாசிமாச அமாவாசை யன்றையதினம் சூரியனை உச்சிக்காலத்திலும் சாயங்காலத்திலும் மேகங்கூடி மறைக்குமாகில் அடுத்து வருகும் மழைகாலத்தில் அதிகமாக மழைபெய்து பூமியி னிடத்துச் சகல பயிர்களும் செழிப்பாக விளைந்து அதினாற் பொன் னும் பொருளு முண்டாமென்று சொல்வாயாக எ-று. (119)

சொல்லுமிடபங்கதிரிருக்கச்சோமன்குசனுந்தண்டுகொறி
புல்ல வன்றிப் புதன்சேயும் பொருந்த வந்தத் தானத்தில்
மெல்ல விருப்பா ராமாகில் மேவு மந்த வருடமதில்
நல்ல வுதகம் பெய்யாமல் நாட்டி லற்ப விளைவாமே.

(இ-ள்) இடபராசியிற் சூரியனிருக்க சந்திரனுஞ் செவ்வாயும், மேடராசியிலாவது மிதுனராசியிலாவதிருக்க அல்லது புதனுஞ்செவ் வாயும் மேற்சொல்லிய ராசிகளிலிருக்க அந்தவருடத்திற் பெருமழை யின்றி சிறுமழையாகப் பெய்யுமதனால் பூமியில் சகல பயிர்களும் அதிகவிளைவின்றி அற்பமான விளைவுண்டாம் எ-று. (120)

ஆமே சிம்ம மதியதனி லடுக்கு மிரண்டு பக்கத்திற்
றுமே பத்தாந் திதிமேகஞ் சார வுதகம் பெய்துசுபம்
பூமே லமர நாற்றிதியிற் பெய்யில் முதலாம் பயிர்கெட்டுப்
போமே யிரண்டாம் பயிர்விருத்திப் பொருந்து மென்னச்சாற்றிடுமே.

(இ-ள்) ஆவணிமாசம் அமரபட்சம் பூர்வபட்சத்தில் வரும் தசமித்திதியன்று ஆகாயத்தில் மேகங்கூடுமாகில் அவ்வருடத்தில் மிக்க மழைபெய்து சகலபயிர்களும் அதிக மேன்மையாக விளைந்து மங்களகரமாயிருக்கும். இஃதன்றியும் மேற்சொல்லிய ஆவணிமாச அமரபட்ச சதுர்த்தித்திதியன்று சிறிதேனும் மழை பெய்யுமாகில் அவ்வருடத்தில் முதன்மையாக நட்டபயிர்கள் வாட்டமுற்று இரண்டாந்தரம் நட்டபயிர்கள் அதிக விருத்தியாக விளையுமென்று சொல்வாயாக எ-று. (121)

சாற்றும் புலியின் மதிவருகுந் தச்சன் கமலஞ் சுளகதனி
லேற்று முதகம் பெய்யுமெனி லிலங்கு மந்த வருடமதிற்
போற்றும் பயிர்கள் செழித்தோங்கும் புகன்ற நாளிற் பெய்யாதேல்
ஏற்ற பயிர்கள் விளைவின்றி யிடஞ்ச லதிக முண்டாமே.

(இ-ள்) ஆவணி மாசத்தில் சித்திரை, சுவாதி, விசாகம் இம் மூன்று நட்சத்திரங்களில் ஒரு நட்சத்திரம் வருந்தினத்தில் மழை பெய்யுமாகில் அவ்வருடத்திற் சகல பயிர்களும் மிக மேன்மையாக விளையும். இவ்விதமின்றி மேற்சொன்ன நட்சத்திர தினங்களில் மழை பெய்யாதேல் தக்கபயிர்கள் மிக்க விளைவின்றி பூமியில் வசிக்கும் மாந்தருக்கதிகச் சஞ்சலமுண்டாம் எ-று. (122)

உண்டா மிவுளி கட்செவியு முற்ற வாவி கைமீனும்
பண்டாங் கன்னி கோனகமும் பறக்குங் காக்கை காற்றுலகாம்
வண்டாங் கங்கு லாரலெலி மாசிக் காற்றுக் கொடுங்கோலும்
கண்டாங் கனலி னுலகமிதிற் கதிரோன் சசியின் கிராணமதே.

(இ-ள்) அசுவனி, ஆயிலியம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி அவிட்டம், இவ்வேழுநட்சத்திரங்களும் வாயுமண்டலமாம். பரணி, கார்த்திகை, பூசம், மகம், பூரம், விசாகம், பூரட்டாதி இவ்வேழு

நட்சத்திரங்களும் அக்கினிமண்டலமாம். இந்த நட்சத்திரங்களிற் சூரிய சந்திரகிரகணங்களிலெதுவேனு மொன்று வருமாகில் எ-று.

அதுவும் வருகிற் பசிப்பிணியு மடுக்கு மாந்தர்மடிந்திடுவர்
சதியா யுதகம் பெய்யாமற் சார்ந்த பயிர்கள் விளைவின்றி
பதியிற் குடிகள் பலவருந்தும் பாலை செங்கை யசுரன்நாள்
வதிசேர்பொய்கைசெக்கறிவன்வருணனுலகா முரசதுவே

(இ-ள்) மேற்சொல்லிய பதினான்கு நட்சத்திரங்களிற் சூரிய சந்திர கிரகணங்களில் ஒரு கிரகணமுண்டாகுமாகிற் சனங்கள் மிகுந்த பசியுண்டாகியதனை மாற்றிக்கொள்ளும் வகையின்றி மரணமடைவார்கள். குறைவின்றி நிறையாக மழைபெய்யாததினாற் சகல பயிர்களுந் தீய்ந்து பலசனங்களும் வருந்துவார்கள். மிருகசீரிடம், திருவாதிரை மூலம், பூராடம், சதயம், உத்திரட்டாதி, இரேவதி இவ்வேழு நட்சத்திரங்களும், வருணமண்டலமாவன எ-று. (124)

முரச முழங்கு மவனியதில் மொழியு முருளை யாவணமும்
விரசாம் பெண்ணை செந்தழலு மேவு மரசர் முடியதுவும்
சிரவ ணத்தோ டவிச்சித்துஞ் சிறக்கு மாகேந் திரவுலகாம்
திரமா மிரவி மதியவனைத் தீண்டிற்கிரணஞ்சொல்வேனே.

(இ-ள்) எங்கு பார்த்தாலும் முரசங்களானது முழங்குகின்ற பூமியினிடத்துச் சொல்கின்ற உரோகணி, புநர்பூசம், அநுசம், கேட்டை, உத்திராடம், திருவோணம், அவிச்சித்து இவ்வேழு நட்சத்திரங்களும் மாகேந்திர மண்டலமாம். இப்பதினான்கு நட்சத்திரத்திற் சூரிய, சந்திர கிரகணத்தில் எதுவேனுமொரு கிரகண முண்டானால் அதன் பலனைச் சொல்வேன் எ-று. (125)

சொல்ல வுதகம் பெய்ததிகச் சோங்காம் புஞ்சை நஞ்சையெலாம்
நல்ல பயிர்கள் விளைந்தோங்கும் நரரும் பல்கி வளர்ந்திடுவர்
இல்லஞ் சகல பாக்கியமு மெய்திச் சதிக ளொடுவாழ்வார்
அல்ல லின்றி யெந்நாளும் அகமு முகமு மலர்வரென்னே.

(இ-ள்) மேற்சொல்லியபடி கிரகண முண்டாகில் அவ்வருடத்

தில் அதிக மழைபெய்து நஞ்சைபுஞ்சைகளில் இட்டபயிர்கள் ஓங்கி வளர்ந்து பொலிவு காணும்படி விளைந்து மாந்தர்கள் எக்களிப்புடையவர்களாய் மனைவிமக்கள் பந்துக்களுடன் ஒருகுறைவின்றி சகலபாக்கியங்களும் பெற்று வாழ்ந்திருப்பார்கள் எ-று. (126)

என்ற வருக்கன் சசியவனை இயல்பா யரவந் தொடும்போது
தென்றற் காற்றுண் டாகிடினுஞ் சேர்ந்தே மேகங் கூடிடினும்
அன்றேற் குமுறல் மின்னலிடி யதனி லெதுவுண் டாகிடினும்
நன்று முதக மிகப்பெய்து நாட்டிற் செல்வ முண்டாமே.

(இ-ள்) சூரியனையுஞ், சந்திரனையும் இராகுகேதுக்கள் தீண்டுங் கிரகண சமயத்திற் காற்றடித்தாலும் ஆகாயத்தில் மேகங்கள் கூடியிருந்தாலும் இஃதன்றி மின்னல், இடி, குமுறல் இவைகளிலெது வுண்டானாலும் அதிகமான மழைபெய்து அதனாற் பூமியிற் சகல செல்வமும் உண்டாகும் எ-று. (127)

உண்டா மருக்கன் சோமனையு முற்ற வைமுன் றுந்தினத்திற்
கண்டா யரவந் தீண்டுமெனிற் ககன முதகம் பெய்யாது
பண்டாம் புஞ்சை நஞ்சைகளின் பயிர்க ளொன்றும் விளையாது
அண்டா தரசர் போர்புரிவ ரன்றே லன்ன மரிதாமே.

(இ-ள்) சூரியசந்திர கிரகணம் பிடிக்குங் காலத்தில் மழைபெய்யுமாகில் பழமையாகிய புஞ்சை நஞ்சைகளிலிட்ட பயிர்கள் விளையாமல் அரசர்களொரு வருக்கொருவர் போர்புரிவார்கள். அவ்வாறு போர் புரியார்களாகில் உணவுப் பொருட்கள் கிடைப்ப தருமையாம் எ-று. (128)

கண்டிடும் பாபக்கோட்கட் கதிர்க்குமுன் நிற்பா ராகி
லெண்டிசை விளைவ தின்றி யேக்கமுற் றிருப்பர் மாந்தர்
சண்டன்முன் சுபர்க ளேகிற் றுன்மகிழ் வுறுவர் மாக்கள்
கொண்டற்பெய் தோங்கிச் செந்நெற் குவலயஞ் செழிக்குஞ் சொல்லே.

(இ-ள்) தினமணியாகிய சூரியனுக்கு முன்பாக பாவக்கிரகங்களாகிய செவ்வாய், சனி, இராகு, கேது, அமரபட்சச் சந்திரனும்

இராகுவுடன் கூடியகுருவும் செல்வார்களாகில் உலகத்தில் மழையின்றி விளைவுகுன்றி மானிடர்கள் பலவிதத்திலும் வருத்த மடைவார்கள். அவ்வாறின்றிச் சுபக்கிரகங்களாகிய பூரணச்சந்திரன் வியாழன், சுக்கிரன் சுபரோடு கூடியபுதன் இவர்கள் செல்வார்களாகில் தேயமெங்கும் பூரணமான மழைபெய்து சகல தானியங்களுஞ் செழிப்பாக விளைந்து மனிதர்கள் சகல பாக்கியங்களையும் பெற்று வாழ்ந்திருப்பார்களென்று சொல்வாயாக எ-று. (129)

சொல்லுமிக் கதிர்நட் பாச்சி தோன்றிட வுச்ச மாகில்
நல்லதோ ராலி பெய்து நாடெலாந் தீங்கு நீங்கும்
எல்லையும் பகைநீ சத்தி லிருந்திடின் மாரி யற்பந்
தொல்லையும் பகையும் நோயுந் தோன்றிடு மவனி யோதே.

(இ-ள்) சூரியனானவன் நட்பாகிய தனுசு மீனத்திலிருந்தாலும். ஆட்சியாகிய சிம்மத்திலிருந்தாலும். உச்சமாகிய மேடத்திலிருந்தாலும். உத்தமமாகிய மழை பெய்து சகல தானியங்களும் விளைந்து அகவிலை மலிந்து தீமைகளொன்று மணுகாமல் தேசத்திலுள்ளவர்கள் வாழ்ந்திருப்பார்கள். இவ்வாறின்றிச் சூரியனானவன் பகையாகிய இடபம், மிதுனம்,கடகம், கன்னி, விருட்சிகம், மகரம், கும்பத்திலிருந்தாலும், நீசமாகிய துலாத்திலிருந்தாலும். இவ்வுலகில் மிகுதியான மழையின்றி அநேகசங்கடங்களும் சத்துருக்களும் பலவித வியாதிகளும் உண்டாமென்று சொல்வாயாக எ-று. (130)

ஓதுநட் பாச்சி யுச்சத் துடுபதி நிற்பா னாகிற்
றீதிலா தாலி பெய்து செய்பயிர் விளைவுண் டாகும்
நீதியான் பகைநீ சத்தில் நின்றிடிற் றானி யங்கள்
பேதமாம் விளைவ தின்றிப் பிணிபல துண்டாந் தானே.

(இ-ள்) சந்திரனானவன் நட்பாகிய மிதுனந் தனுசு மீனத்திலிருந்தாலும். உச்சமாகிய இடபத்திலிருந்தாலும். குற்றமின்றி மழைபெய்து சகலதானியங்களும் விளைவுண்டாகும். இவ்வாறின்றிச்சந்திரனானவன் பகையாகிய மேடம்,சிம்மம், கன்னி, துலாம், மகரம், கும்பத்திலிருந்தாலும். நீசமாகிய விருட்சிகத்திலிருந்தாலும் சகலபயிர்களும் விளைவின்றி பற்பல வியாதிகளுமுண்டாகும் எ-று. (131)

தானுமங் கலனுங் காரி தன்னுட னரவுங் கூடிற்
றேனுறு மொழியாய் வையஞ் சீகர மின்றி வாடும்
பேனுறும் பகைத்தா னத்திற் பிரிந்திருந் தவரைப் பார்க்கிற்
கானுறுங் காலி மாண்டு கன்றுகள் கதறுந் தானே.

(இ-ள்) செவ்வாயானவன் சனி, இராகு,கேதுடன் கூடியிருக்கில் தேனைப்போலத்தித்திக்கும் இனியவாக்குடைய பெண்ணே இவ்வுலகிற் செவ்வாய் மழைபெய்யாமற் சகலபயிர்களும் வாட்டத்தையடையும். அவ்வாறின்றிச் செவ்வாயானவன் பகையாகிய சிம்மம், தனுசு, கும்பம், மீனத்திலிருந்து மேற்சொன்னவர்களைப்பார்ப்பானாகில் தாயாகியபசுவினங்கள் மாழச்சேயாகிய கன்றினங்கள் கதறிக்கொண்டிருக்கும் எ-று. (132)

கதறிடும் விலங் கினங்கள் கடற்சலம் வற்றிப் போகுஞ்
சிதறிடுஞ் செவ்வாய் நீசஞ் சேர்ந்திடிற் றேச மெங்கும்
உதறிடு முண்மை நல்லோ ருரைத்திடார் கொலைமிகுக்கும்
மதமுறுஞ் செவ்வாய் நீச வக்கிரம் நின்ற தாலே.

(இ-ள்) செவ்வாயானவன் நீசமாகிய கடகத்திலிருக்க மேற்சொல்லியவாறு மிருகக்கூட்டங்கள் வாட்டமுற்றிருக்கவும் சமுத்திர சலம் வற்றிப்போகவுஞ் செய்யும். இவ்வாறின்றிச் செவ்வாயானவன் நீசத்தில் வக்கரமானால் உலகத்தில் மேலானவர்களும் கீழானவர்களைப்போல மெய்சொல்லாமற் பொய் சொல்வார்கள். மாந்தர்கள் சாந்தமின்றிக் கொலை களவு மிகுதியாகச் செய்வார்கள் எ-று. (133)

நின்றிடப் பகையிற் செவ்வாய் நீணிலத்தவர்கட்கெல்லாம்
கன்றிடக் கவலை யுண்டாங் காசினி விளைவு குன்றுஞ்
சென்றிட வக்க ரிக்கிற் செருக்களத் தரசர் போரிற்
கொன்றிடக் குருதி யோடுங் குவலய மீதி லென்னே.

(இ-ள்) செவ்வாயானவன் பகையாகிய சிம்மம், தனுசு, கும்பம், மீனத்திலிருக்கும்போது, உலகத்துள்ள மாந்தருக்கெல்லாம் நலமிலாக்கவலையும் இட்டபயிர்கள் விளைவின்மையுமுண்டாகும். இவ்வா

றின்றிச் செவ்வாயானவன் வக்கரித்திருக்கிற அரசர்கள் போர்களத்திற்பொருதுஞ் சமரினுலிரத்தப் பிரவாகமுண்டாகும் எ-று. (134)

என்றபின் செவ்வாய் நட்பி லியல்புட னிருப்பா னாகில்
நன்றுபின் சாலி யெள்ளும் நாடெலாம் விளைந்து நல்கும்
நின்றுபின் வக்க ரித்தால் நீணில மனிதர்க் கெல்லாம்
கன்றுபின் கறவை சேருங் காசினி விளங்கும் மென்னே.

(இ-ள்) செவ்வாயானவன் நட்பாகிய இடபம், மிதுனம், கன்னி துலாத் திலிருக்கும்போது நன்றாகமழைபெய்து குன்றாமற் சகல தானியங்களும் விளைந்து சுபகரமாக விளங்கும். மேற்படி செவ்வாய் மேற்படி ராசிகளில் வக்கரகதியானால் மனிதர்களுக்குச் சேமமும் பாற்பசுபாக்கிய விருத்தியுமுண்டாகும் எ-று. (135)

ஏணுறுஞ் செவ்வாய் தானு மிருந்தவீ டுச்ச மாகில்
மாணுறுஞ் சோனை பெய்யு மங்கலன் வக்க ரித்தாற்
பூணுறும் பொருளு மாடை பொசிப்பறு சுவையு மிக்க
நாணுறு முலகுக் கெல்லாம் நயமெனத் துணிந்து சொல்லே.

(இ-ள்) செவ்வாயானவன் உச்சமாகிய மகரத்திலிருக்கும் போது அதிகமாக மழைபெய்யும் செவ்வாயானவன் மேற்படி ராசியில் வக்கரித்தாற் பொன்னும் பொருளும் உண்ணுமுணவும் ஆடையாபரணங்களும் உண்டாமெனச் சொல்வாயாக எ-று. (136)

சொல்லுமிச் செவ்வா யாட்சி சுகத்துட னிருப்பா னாகில்
நல்லதோர் மழையும் பெய்து நாடெலாம் விளைவுண்டாகும்
மெல்லவே வக்கரிக்கில் மேதினி மாந்த ரெல்லாஞ்
செல்வமுங் கீர்த்தி பெற்றுத் திரமுடன் வாழு வாரே.

(இ-ள்) செவ்வாயானவன் ஆட்சியாகிய மேடவிருட்சி கத்தி லிருப்பானாகில் உலகத்தில் நல்லமழைபெய்து எல்லாத்தானியங்களும் விளைவுண்டாகும். செவ்வாயானவன் மேற்படி ராசியில் வக்கரித்தால் தேசமெங்குஞ் செழித்து மாந்தர்கள் செல்வமுஞ் சிறப்புந்திட்மும் பெற்று வாழ்வார்கள் எ-று. (137)

வற்புசே யாட்சி யஸ்த மனமுந்தா ளுகும் போதும்
உற்பவ முலக மெங்கு மொளிபெற விளக்க மாகும்
அற்பமாம் பகைநீ சத்தி லமர்ந்துமவ் விதமே யாகிற்
கற்புடை மகளீர் கேடாய்க் காசினி விளங்கும் காணே.

(இ-ள்) செவ்வாயானவன் ஆட்சியாகிய மேடவிருச்சிகத்தி லஸ்தமன மாயிருக்கில் சகலசீவ செந்துக்களுற்பத்தி யாகும் உலகத் திற்குணவாகிய தானியங்கள் விளைந்து அகவிலைமலிந்து சுபமங்கள கரமாக விருக்கும். இவ்வாறின்றி செவ்வாயானவன் பகையாகிய சிம்மம், தனுசு, கும்பம், மீனத்திலும். நீசமாகிய கடகத்திலு மிருக் கும்போது அத்தமனமாகில் உலகத்திலுள்ள உத்தமஸ்திரீகளின் கற்பழிந்து வேசிகளாய்ப் பிரசித்திகளா யிருந்து வாழ்வார்கள் எ-று. (138)

காணுமிக் குசனும் நட்பிற் கலந்திருந் தத்த மிக்கில்
நாணும்பல் விளைவு குன்றி நற்பல னெல்லாங் கேடாம்
ஊணுமில் லாதி லங்கு முச்சத்தி லத்த மிக்கில்
மாணுமிப் புவியி லுள்ள மாந்தர்க்குப் பீடையாமே.

(இ-ள்) செவ்வாயானவன் நட்பாகிய இடபம், மிதுனம், கன்னி, துலாத்திலிருக்கும்போது அத்தமனமாகில் பலதானியங்களும் விளை யாமல் நற்பலனன்றி துற்பலனுகவும். உண்ணக்கூடிய பதார்த்தங்கள கப்படாமலு மிருக்கும். இவ்வாறின்றிச் செவ்வாயானவன் உச்சமா கிய கடகத்திலிருக்கும்போது அத்தமனமாகில் உலகிலுள்ளசனங்க ளுக்குப் பீடையாகிய பலதுன்பங்களுண்டாம் எ-று. (139)

நல்லதோர் புந்தி யாட்சி நட்புட னுச்ச மாகில்
சொல்லதோர் சோனை தானுந் தொல்லுல கெங்கும் பெய்யும்
வல்லதோ ரில்லந் தன்னில் வக்கர மாகும் போது
செல்லதோ ரடவி யேகித் திடமுடன் பெய்யு மென்னே.

(இ-ள்) புதனுனவன் ஆட்சியாகிய மிதுனத்திலும் நட்பாகிய மேடம் இடபம்கடகம் துலாம் விருட்சிகம் தனுசு மகரம் கும்பத்திலும்

உச்சமாகிய கன்னியிலுமிருப்பானாகில் உலகெங்கும் மழை பெய்து தானியங்கள் செழிப்பாக விளைந்து மலிவாகவிற்கும். அல்லது மேற்சொல்லிய ராசிகளொன்றில் வக்கிரமானால் அக்காலத்தில் மழையானது கானகங்களிற் பெய்யுமே யொழிய நாட்டில் மாந்தருக்குபயோகமாகப் பெய்யாது எ-று. (140)

பண்டுநற் புந்தி தானும் பகையொடு நீசத் துற்றால்
விண்டிடி லுலக மெங்கும் விளைவது குன்றிப் போகும்
மண்டலப் புலவ னானோன் வக்கரித் திருப்பா னாகில்
எண்டிசைப் பயிர்க ளெல்லாம் மிளைத்தது சருகாய்ப் போமே.

(இ-ள்) புதனானவன் பகையாகிய சிம்மத்திலும், நீசமாகிய மீனத்திலுமிருப்பானாகில் மழையின்றிப்பயிர்கள் விளையாது. புதனானவன் மேற்படிராசிகளொன்றில் வக்கரிப்பானாகில் எத்திசையிலும் அக்கினியொத்த வெப்பத்தினாலும் அகோரக்காற்றினாலும் பூமியிலிட்டபயிர்கள் யாவுந்தீய்ந்து சருகாயுலர்ந்து போம் எ-று. (141)

வந்திடு மறையோ னாட்சி மனையதி லிருக்கும் போது
செந்தமி முடைய வையஞ் சீருடன் மாரி பெய்யும்
மந்தமா யந்தப் பொன்னன் வக்கரித் திருப்பா னாகில்
இந்திர னுலகம் போலா மிப்புவி யுருவந் தானே.

(இ-ள்) வியாழன்ஆட்சியாகிய தனுசு சிம்மத்திலிருக்கும்போது கல்விப்பொருளும் செல்வப்பொருளுஞ் சிறப்புற்றோங்கும். காசினியெங்கும் நன்றாய்மழைபெய்து சுபிட்சமாயிருக்கும். மேற்கண்டஆட்சியாகிய ராசிகளிரண்டி லொன்றில் வக்கரித்திருக்கில் தேவலோகம் போலப்பலவித ஆடம்பரத்துடன் தேர்திருவிழா சிவாலயம் விஷ்ணுவாலயங்களில் நடக்கும்சனங்கள் அதிகமகிழ்ச்சியாய்க் கொண்டாடுவதுடன் தங்கள் தங்கள் மனைகளில் பந்துக்களுடன் விருந்துண்டு புத்திரர் மித்திரர்விவாக மகோற்சவத்தைக் கண்டானந்திப் பார்கள். (142)

உருவமோ டுற்ற பொன்ன னுச்சம்பெற் றிருப்பா னாகில்
இருண்மழை பொழிந்து மண்மே லிராசராற் பயமுண் டாகும்
வருமறை யுலகுக் கெல்லாம் வக்கரித் திருக்கு மாகில்
திருவிருந் திலங்கு மெல்லாத் தேசமூங் கூறுங் காலே.

(இ-ள்) வியாழன் உச்சமாகியகடகத்திலிருந்தால் மேகமானது வாரியின் நீரையுண்டு இருண்டு மேதினியெங்கும் நல்லமழைபெய்து சகல தானியங்களும்விளைந்து மலிவாயிருக்கும். ஆனால்பூபதிகளாகிய அரசர்களாற் சிறிது பயமுண்டாகும். அன்றியும் மேற்கண்ட உச்ச வீடாகிய கடகராசியிற் வியாழன் வக்கரித்திருக்கில் அக்காலத்தில் ருக்கு, யசுர், சாம, அதர்வன, மென்ற நான்கு வேதங்களுஞ் சப்திக்கின்ற இவ்வுலகின் கண் திருமகளாகிய இலக்குமியிருந்து தாண்டவம் புரிவாள் அதனாற் சகலபாக்கியமும் புத்திரபவுத்திர விருத்தியுடன் மனிதர்கள் மங்களகரமாக வாழ்ந்திருப்பார்கள் எ-று. (143)

கூறுட் ளுண்ட எப்பான் கொண்ட வீ டுறவ தாகில்
வீறுடன் கன்னற் செந்நெல் விளைவுறுந் தேச மெங்கும்
மாறுடன் கட்டுச் சேரும் வக்கிர மாகும் போது
வேறுடன் கலைபொன் னுடை விலைகளுஞ் சகாய மாமே.

(இ-ள்) வியாழன் நட்பதாகிய இடபம்,மிதுனம்,சிம்மம்,கன்னி, துலாம், கும்பத்திலிருக்குங்காலத்தில் கரும்பினங்களும் செழுமையாகிய நெற்களும் விளைந்து கரும்பைக்கட்டாகக் கட்டியும் நெற்களைக் களஞ்சியத்திற்குங் கொண்டு செல்வார்கள். அன்றியும் மேற்படிராசிகளொன்றில் வக்கரித்திருக்கில் அவனியெங்கும் ஆடையாபரண வினங்களாகிய வஸ்துக்களனைத்தும் விலைசகாயமாக விற்கும் எ-று. (144)

பந்தமா மறையோன் ருனும் பகையிலத் திருப்பா னுகில்
அந்தமா மரசர்க் கெல்லா மரும்பொருள் கேட தாகும்
வந்தமா பொன்னன் ருனும் வக்கர மாகி நின்றால்
நிந்தைமா மன்னர் கெட்டு நிலைதவிர்ந் தலைவா ரென்னே.

(இ-ள்) வியாழன் பகையாகிய மேடவிருட்சிகத்திலிருக்கில் அரசர்கள் சம்பாதித்து வைத்திருந்த திரவிய மெல்லாம் விரயமாகும். அன்றியும் மேற்படிபகைராசியாகிய விரண்டிலொன்றில் வியாழன் வக்கரித்திருக்கில் அரசர்கள் தங்களிருப்பிடமாகியத் தானத்தை விட்டு நீங்கிப்பற்பலவிடங்களிலலைவார்களென்றுசொல்வாயாக எ-று. (145)

இன்னமும் வேந்த னட்பி லிசைந் துடன் மறைவாகுகிற்
சொன்னமுந் தாள மாடை தோற்றமுங் குறைந்து காணும்
பொன்னவன் பகைநீ சத்திற் புக்கிவக் கரமு மாகில்
கன்னலுஞ் செந்நெ லற்பங் களவுநாற் றிசையு மாமே.

(இ-ள்) வியாழன் நட்பாகிய இடபம், மிதுனம், சிம்மம், கன்னி, துலாம், கும்பத்திலிருந்து அத்தமனமாகில் தங்கம், முத்து, வத்திரம் முதலான வத்துக்கள் குறைந்து போகும். அன்றியும் வியாழன் பகையாகிய மேடவிருட்சிகந்திலும் நீசமாகிய மகரத்திலுமிருந்து வக்கரிக்கில் கரும்பு, நெல் முதலிய தானியங்களும் விளைவு குறையும். அதனால் நாலாபக்கத்திலும் களவுபோம் எ-று. (146)

நாற்றிசை விளங்கும் வெள்ளி நட்பதி லிருப்பா னுகிற்
சாற்றிசை விளைவு நன்றுந் தரணியி லதிக மேன்மை
மாற்றிசை மீண்டு நிற்கில் வாணிப மிகவுண் டாகுந்
தோற்றிசை யாவி னங்கள் சுறந்துபாற் கறக்கு மென்னே.

(இ-ள்) சுக்கிரன்நட்பாகிய மேடம், மிதுனம், விருட்சிகம், தனுசு, மகரம், கும்பத்திலிருக்கில் நாலாபக்கத்திலும் சகல தானியங்களும் விளைந்து மிக மேன்மையுண்டாகும். மேற்கண்டராசிகளொன்றில் சுக்கிரன் வக்கரித்திருக்கில் வியாபாரலாபவிருத்தியும் பாற்பசுக்களேராளமாகப்பாற் கறக்குதலும் சகலவித வஸ்துக்கள் பெருக்கமுமுண்டாடாகுமென்று சொல்வாயாக எ-று. (147)

இன்னமு மாட்சி தன்னி லெழிற்புகர் நிற்பா னுகில்
மன்னிய வுதகம் பெய்து வான்பயிர் விளைவுண் டாகும்
அன்னிய ராசி தன்னி லப்புகர் வக்க ரிக்கில்
மின்னிய வெள்ளி முத்தும் விளைவின்றிக் குறைவ தாமே.

(இ-ள்) சுக்கிரன் ஆட்சியாகிய இடபதுலாத்திலிருக்கில் மேகமானதுவாரியின் நீரையுண்டு சூற்கொண்டு பெருமழையாகப் பெய்யும் அதனாற் சகலதானியங்களும் மிகுதியாக விளைந்துபொன்னு முத்தும் விசேடமாயுண்டாகும். அன்றியில் மேற்சொல்லிய விருராசியிலொரு ராசியிற் சுக்கிரனனவன் வக்கரித்திருக்கில் மழையின்றி விளைவு

குன்றி பொன் வெள்ளி முத்தும் விசேடமா யகப்படாமற் கிராக்கியா யிருக்குமென்று சொல்வாயாக எ-று. (148)

ஓதுநல் லொள்ளி யோனு முச்சம்பெற் றிருப்பா னாகில்
போதுசெய் வாணி பத்தாற் பொருளதி லாப முண்டாம்
மாதுயர் வெள்ளி வந்து வக்கிர மாகி நிற்கில்
வேதுடன் றேச மெங்கும் வெள்ளத்தாற் சேத மாமே.

(இ-ள்) சுக்கிரன் உச்சமாகிய மீனத்தி லிருக்கில் அக்காலத்திற் செய்யும்படியான வியாபாரத்தால் மாந்தர்களுக்கு மிக்கதன லாபங் கிடைத்துச் சுகமாக வாழ்ந்திருப்பார்கள். அதுவன்றி மேற்கூறியராசியில் சுக்கிரனானவன் வக்கரித்திருக்கில் உலகமெங்கும் பெருமழைபெய்து வெள்ளந்திரண்டோடிப் பயிர்களை யழித்து வெள்ளப் பஞ்சமாகும் எ-று. (149)

சென்றிடுஞ் சுங்கன் றானுஞ் சேர்பகை வீட்டில் நிற்கிற்
குன்றிடுங் காலி செட்டுக் குறையுமே வாணி பங்கள்
அன்றியே வக்க ரிக்கி லவனியிற் பயிர்க ளய்ந்து
பொன்றிடா தாலி யாழி பொழிந்திடு மென்று சொல்லே.

(இ-ள்) சுக்கிரன் பகையாகிய கடகசிம்மத்திருக்கில் ஆடுமாடு முதலிய நாற்கால் சீவன்கள் பலவித நோயால் மாளுவதுடன் வியாபாரத்தி லதிகலாப மில்லாமல் வர்த்தகர்கள் மனவருத்தப் படுவார்கள். அன்றியும் மேற்கூறியராசி யிரண்டிலொன்றில் சுக்கிரன் வக்கரிக்கில் உலகமெங்கும் மழைபெய்யாமற் பயிர்கள் தீய்ந்து போம்படியாக உபயோகமின்றி வியர்த்தமாய்க் கடலில் மழைபெய்து கப்பல் போக்கு வரத்துக்குத் தடை செய்யுமெனச் சொல்வாயாக எ-று. (150)

தானுறும் வெள்ளி நீசஞ் சார்ந்திட வுதக மின்றிக்
கானுறும் பயிர்க ளய்ந்துங் கடற் சலம் வற்றிப்போகும்
வானுறும் புகரோன் றானும் வக்கர மாகி நிற்கில்
தேனுறுந் தொடை மன்னர்க்குத் தீதுண்டா மென்று கூறே.

(இ-ள்) சுக்கிரன் நீசமாகிய கன்னியி லிருக்கில் உலகில் மழை யின்றிச் சமுத்திரசலமும் வற்றிக்கப்பல்கள் மணற்றிடலிற்றட்டிக் கொள்ளும் அன்றியும் மேற்சொல்லிய ராசியிற் சுக்கிரன் வக்கரிக்கில் தேன்ததும்பு கின்றமலர் மாலையைத் தரித்த அரசர்களுக்குப் பொல் லாங் குண்டா மெனச் சொல்வாயாக எ-று. (151)

கூறிய வெள்ளி நட்பிற் கூடியே யத்த மிக்கில்
ஏறிய சுவர்ந னைந்தே யில்லம்வீழ் மழையு முண்டாம்
தேறிய சுங்க னாட்சி சேரில மத்த மிக்கில்
மீறிய பருத்தி நூலும் வெண்கல மிகவுண் டாமே.

(இ-ள்) சுக்கிரன் நட்பாகிய மேடம், மிதுனம், விருட்சிகம், தனுசு, மகரம், கும்பத்திலிருந்து அஸ்தமன மானால் வீட்டுச் சுவர் கள் நனைந்து பொருமி விழுந்து விடும்படியான மழை பெய்யும் அன்றியுஞ் சுக்கிரனுனவன் ஆட்சியாகிய இடபதுலாமிரண்டி லொன் றில் அஸ்தமன மாகில் பருத்தி, நூல், வெண்கலம் மிகுந்து சகாய மான விலைக்குக் கிடைக்கும் எ-று. (152)

உண்டெனுஞ் சுக்கி ரன்று னுச்சத்துள் ளத்த மிக்கிற்
பண்டெனுங் கடலின் முத்தும் பவளமுஞ் சங்கு முண்டாம்
மண்டலம் விளங்க வேதான் மாரியுங் குளிரப் பெய்யுங்
கொண்டநீ சத்தி லத்தங் குணமிலே மழைமட் டென்னே.

(இ-ள்) சுக்கிரன் உச்சமாகிய மீனத்தில் அஸ்தமனமாகில் உல கத்தில் விசேடமாக மழை பெய்து சகல தானியங்களுஞ் செழிப்பாய் விளையும். பழமையாகிய சமுத்திரத்தில் முத்துஞ், சங்கும், பவளங் களும் விளைந்து சிறப்பாகப் பிரகாசிக்கும். அன்றியும் நீசமாகிய கன் னியா ராசியிற் சுக்கிரன் அஸ்தமனமாகில் உலகிலுள்ளவர்கள் மழை யின்றி விளைவுகுன்றிச் சஞ்சலப் படுவார்களெனச் சொல்வாயாக எ-று. (153)

ஒன்றிடும் பகையிற் சுங்க னுற்றதி லத்த மிக்கிற்
கன்றிடும் பூமி யெங்குங் கன்னியர் கெற்பம் வீழும்
நின்றிடும் நிலைத ளர்ந்து நிதியதுங் குறைந்து காணும்
வென்றிடும் வேந்த ராலே வெகுசனச் சேத மாமே.

(இ-ள்) சுக்கிரன் பகையாகிய கடகசிம்மத்தில் அஸ்தமனமாகில் பூமியில் மழைபெய்யாது வெப்புண்டாகிப் பெண்களுக்குறுங் கெற்பங்களுஞ் சிதைந்துஞ்சனங்கள் தங்கள் நிலமை தவறியும் திரவியங்களும் பொருள்வரத்துங் குறைந்தும் அரசர்களுக்குட்பகை முதிர்ந்து நடக்கும் யுத்தத்திற் குதவியாகச் சென்ற அநேக சுத்த வீரர்கள் மடிந்து போவார்கள் எ-று. (154)

சொல்லிடு முடவ னட்பிற் சுகம்பெற நிற்பா னாகில்
நல்லதோ ருதகம் பெய்து நாடெலாம் விளைவுண் டாகும்
வல்லநோய் முகனும் பேர்ந்து வக்கர மாக நின்றால்
எல்லையிற் கன்று காலி யெழிலுற விளங்குங் காணே.

(இ-ள்) சனியானவன் நட்பாகிய இடபம், மிதுனம், கன்னி, தனுசு, மீனத்திலிருந்தால் பூமியில் நல்ல மழைபெய்து சகலதானியங்களும் விளைந்து மனிதர்கள் சேமமாகவாழ்வார்கள். அன்றியும் சனியானவன் மேற்சொன்னராசிகளிலொன்றில் வக்கரிக்கில் நாற்கால் சீவன்களாகிய ஆடு, மாடுகள் எக்களிப்பாகவும் அழகாகவும் பெருமனாகவும் சுகமாகவும் சீவித்திருக்கும் எ-று. (155)

காணியா மாட்சி தன்னிற் காரிவந் திருப்பா னாகில்
நீணிலத் தரச ரெல்லாம் நெறியொடு பூமி யாள்வர்
கோணிய முடவன் றானுங் குணமொடு வக்க ரிக்கில்
வாணிய ரெள்ளி னாலே வாழ்வரென் றுரைக்க லாமே.

(இ-ள்) சனியானவன் ஆட்சியாகிய மகரகும்பத்திலிருக்கில் பூமியைப்பாதுகாக்கும் அரசர்கள் நீதிதவறாமல் ஆட்சிபுரிவார்கள். ஆகினுஞ் சனிமுடவனனபடியால் இடையிடையே சிறிது சஞ்சலங்களுமுண்டாகும். அன்றியும் மேற்சொல்லியராசிகளில் சனியானவன் வக்கரிக்கில் வாணிபர்கள் எள்ளினால் தக்கலாபத்தையுந் தேகாரோக்கியத்தையுமடைவார்கள் எ-று. (156)

உற்றசா வகனுந் தானே வுச்சத்தி லிருப்பா னாகில்
நற்றலக் கோயி லெல்லாம் நாடொறும் பூசை யுண்டாம்
மற்றுமிக் காரி வக்ர மாகிடி லாலி பெய்து
வற்றிய குளமுங் கூபம் வந்துநீர் பெருகுந் தானே.



(இ-ள்) சனியானவன் உச்சமாகிய துலாத்தி லிருக்கில் புவியி லுள்ள தேவாலயங்களிலெல்லாம் தினந்தோறும் நடக்கவேண்டிய கிரமப்படி பூசை நிவேதன ஆராதனை தேர்திருவிழா முதலியமகோற் சவங்களும் நடக்கும் மேற்சொன்னராசியிற்சனிவக்கரிக்கில்விசேடமா கிய மழைபெய்து வற்றிப்போன கிணறு, குளம், கண்மாய்களில் நீர் நிறைந்து சகல தானியங்களுஞ் செழிப்பாக விளையும் எ-று. (157)

மந்தனும் பகைவீ டேகின் மாரியு மற்ப மாகும்
நந்தன வனங்கண் சூழும் நாட்டினிற் கலக முண்டாம்
அந்தவீ டதனில் வக்ர மாகிட முடவன் ருனும்
சந்தஞ்சேர் மன்னர் தானுந் தரணியில் மடிவ ரென்னே.

(இ-ள்) சனியானவன் பகையாகிய கடகம், சிம்மம், விருட்சிகத் திலிருக்கில் வாசனை வீசுகின்ற மலர்கள் நிறைந்த காவினஞ்சூழ்ந்த இந்நாட்டிலுள்ள மாந்தர்கள் ஒருவருக்கொருவர் நட்பின்றிச்சண்டை யிட்டுக் கொள்வார்கள். மேற்சொல்லிய மூவ்விராசியிலொருராசியிற் சனியானவன் வக்கரிக்கில் அழகோடுங் கூடியவரசர்கள் அவனியை விட்டகன் றிடுவரெனச் சொல்வாயாக எ-று. (158)

செப்பிடச் சனியும் நீசஞ் சேரவே மழையு மற்பம்
கப்பிடத் தேச மெங்குங் கள்ளராற் சோர முண்டாம்
ஒப்பிடப் பங்கு நீசத் துற்றங்கு வக்க ரிக்கில்
நப்பிடக் குறைந்து தேச நட்டமா மென்று கூறே.

(இ-ள்) சனியானவன் நீசமாகிய மேடத்திருக்கில் மழைபெய் யாமல் தேசமெங்குந் திருடர்களாற் களவும் பயமுமுண்டாகும். அன்றி யுஞ் சனியானவன்மேற்சொல்லியராசியில் வக்கரிக்கில் உலகத்திலுள் ளவர்கள் சிநேகப்பான்மையின்றி மனத்தாபமேற்பட்டு ஒருவருக்கொ ருவர் பிரிந்து போவார்கள். நஞ்சை புஞ்சைகளிலிட்டபயிர்கள் விளையா மல் நட்டமுண்டா மெனச் சொல்வாயாக எ-று. (159)

கூறிய காரி நட்பிற் குறைந்திடுந் தான தன்மம்
ஏறிய வாட்சி யாகி லிப்புவி விளைவுண் டாகும்
தேறிய துலையி லுச்சந் தேசத்தி லதிக நன்மை
மாறிய பகையி லத்த மளமெனிற் சோரம் போமே.

(இ-ள்) சனியானவன் நட்பாகிய இடபம், மிதுனம், கன்னி, தனுசு, மீனத்தில் அஸ்தமனமாகில் தாரணியில் தானதருமங் குறைந்து அக்கிரமம் அதிகமாகும். அவ்வாறின்றி ஆட்சியாகிய மகர கும்பத்திற் சனியானவன் அஸ்தமனமாகில் மாநிலமெங்கும் மழைபெய்து பயிர்கள் விளைந்து சுபிட்சமாயிருக்கும். சனியானவன் உச்சமாகிய துலா ராசியில் அஸ்தமனமாகில் பாரிற்சீராய் மாரிபெய்து பயிர்கள் செழிப்பாய்விளைந்து மனிதர்கள் மங்களகரமாயிருப்பார்கள். சனியானவன் பகையாகிய கடகம், சிம்மம், விருட்சிகத்தில் அஸ்தமனமாகில் தேசமதனில் வாசஞ்செய்யும் மாந்தர்களிடத்தில் பாந்தமுடையவர்கள் போலத்திருடர்கள் பாசாங்குசெய்து காசுபணத்தை மோசமாக எடுத்துக் கொண்டோடிப் போவார்கள். அதனாற் சனங்கள் வாழ்க்கைக்குரிய வஸ்துக்களை வாங்கமுடியாமல் அவஸ்தைப்படுவார்கள் எ-று. (160)

பகையிலாச் சனியும் நீசப் பாங்கத்த மனம தாகிற்
சிகையிலாக் கள்ள ராலே திரவியஞ் சேத மாகும்
நகையிலாப் பாவை போலே ஞாலத்தி லுள்ளோ ராவர்
தகையிலாப் பாம்பினோடு சனியுறிற் குற்றஞ் சொல்லே.

(இ-ள்) சனியானவன் நீசமாகிய மேடராசியில் அஸ்தமனமானால் தேசத்தில் வாழ்பவர் பொருட்களைத் திருடர்கள் வாரிக் கொண்டு செல்வார்கள். அதினால் சனங்களுக் கதிக நஷ்டமுண்டாகி நகைகளணியாத நங்கையரைப் பார்த்தா லெப்படி யிருக்குமோ அப்படி யிருப்பார்கள். அன்றியும் மேற்படிராசியி லிருக்கும் சனியுடன் இராகாவது அல்லது கேதாவது சேர்ந்திருக்கில் உலகத்தில் அளவில்லாத தீதுண்டாமென்று சொல்வாயாக எ-று. (161)

தாலமேற் செவ்வாய் பாம்பைச் சார்ந்துவக் கரித்து நிற்கிற்
சாலவே மனிதர்க் கெல்லாஞ் சங்கட முண்டாய் மாள்வர்
கோலமாங் குருவி னோடு குலவுநோய் முகனுஞ் சேரில்
சீலமா மரச ருக்குள் சிலுகுண்டா மென்று செப்பே.

(இள்) செவ்வாயானவன்இராகுடன்கூடி வக்கரிக்கில்உலகத்தில் சனங்கள்பலவித வியாதிக்ளினாற் சங்கடப்பட்டுமாண்டுபோவார்கள்.

அதுவன்றி வியாழனுஞ் சனியுங்கூடி வக்கரிக்கில் அரசர்களுக்கு விரோதிகளேற்பட்டு போர்க்களத்திற் போர்புரிந்து உயிர் துறப்பார்களெனச் சொல்வாயாக எ-று. (162)

செப்பிடும் பாம்பி ரண்டிற் சேயனை யொன்று சேரி
லொப்பிடக் காரி பார்க்கி லுதகமும் பெய்தி டாது
வெப்பங்கொண் டிருக்குங் காடு விளைவின்றிக் கருகுங் காலி
தப்பிலா மனிதர் மைந்தர் தன்னையும் விற்பா ரென்னே.

(இ-ள்) செவ்வாயுடன் இராகாவது, கேதாவது கூடியிருக்கச் சனியவர்களைப் பார்க்க உலகத்தில் மழைபெய்யாது அதிக வெப்பமுண்டாகி நஞ்சை, புஞ்சைகளி லிட்டபயிர்கள் விளைவின்றித் தீய்ந்து போகவும். மாடுகன்றுகளுக்குப் பலவித நோயுண்டாகி மாண்டுபோதலும். சனங்கள் வெப்ப மிகுதியினாற் குடிக்கத் தண்ணீரின்றிக் கையிலுள்ள திரவியங்களை யெல்லாஞ் செலவு செய்துவிட்டுச் சாப்பாட்டுக்கும்வழியின்றி தங்கள் குழந்தைகளையும் விற்றுச்சீவிப்பார்களென்று சொல்வாயாக எ-று. (163)

காணுமிக் கதிரோன் செவ்வாய் கலந்துபாம் போடு நிற்கில்
நீணிலத் தவர்கட் கெல்லாம் நெருப்பினாற் பயமு முண்டாம்
பா ணுறு விளங்குங் காரி பாம்பொடு வக்க ரிக்கில்
வே ணுறு மாரி பெய்து விளைபயி ரோங்குந் தானே.

(இ-ள்) சூரியனும், செவ்வாயும் இராகோடாவது அல்லது கேதோடாவது கூடியிருக்கில் உலகிலுள்ளவர்களுக்கெல்லாம் அக்கினியினால் முக்கிய பயமுண்டாகும். அன்றியுஞ் சனியானவன் வக்கரித்து இராகோடாவது கேதோடாவது சேர்ந்திருக்கில் நல்லமழை பெய்து நஞ்சை புஞ்சைகளில் இட்டபயிர்கள் நட்டமின்றி விளைந்து மாந்தர்கள் கட்டமில்லாமல் வாழ்ந்திருப்பார்கள் எ-று. (164)

மேலெனும் வெள்ளி யோடே விடவரவொன்றுய்க்கூடில்
காலியைத் திருடுந் துட்டக் கசடருக்கு கழிவுண் டாகும்
கோலமாந் தருக் கரிட்டங் குருவுட னரவுங் கூடில்
ஞாலமேற் கலகத் தாலே நரபதிக் கழிவு சாற்றே.

8

(இ-ள்) சுக்கிரனுடன் இராகாவது கேதாவது கூடிநிற்கில் ஆடு மாடுகளைத்திருடுந்திருடர்கள் களவு செய்தற்கிடமின்றி உணவுப்பொருட்களகப்படாமற் கட்டப்பட்டு மாண்டுபோவார்கள். குருவுடன், இராகு அல்லது கேது கூடியிருக்கில் காசினியுள்ளபோர் வீரர்களாற் கலகமுண்டாகி அரசர்களுக்கழிவுண்டாமெனச் சொல்வாயாக எ-று.

சாற்றிய வெள்ளி யோடே சண்டனுஞ் சேயுங் கூடிற்
போற்றிய வுலக மெல்லாம் பொடிபடு மகமுந் தாழும்
தேற்றிய மழைக்கோ ளோடு சேயனு முடவன் கூடில்
ஏற்றிய படையி னுலே யிரத்தநீ ரோடுந் தானே.

(இ-ள்) சுக்கிரனுடன் சூரியனுஞ்செவ்வாயுங்கூடியிருக்கிற்ருல் லுலகெங்கும் நன்மழையின்றிச் சொல்லும் பயிர்கள் விளைவுகுன்றி நெல்லு முதலிய தானியங்குன்றி அகவிலை தாழும். மேலுஞ் சுக்கிரனுடன் சனியுஞ் செவ்வாயுங் கூடில் அரசர்களுக்குட் சண்டை மூண்டு யானை; சேனைகள் மாண்டு இரத்தமானது தண்ணீராகவோடும் எ-று.

மன்னவன் மந்தன் சண்டன் மண்மகன் கூட வன்றி
பொன்னனு முடவன் சேய்க்குப் பொருந்தவே ழிடத் திருக்கில்
தென்றிசை யிலங்கை தொட்டுத் திகழ்வட மேரு மட்டும்
நன்றிசேர் மாந்த ருக்குள் நாடிடுங் கலகந் தானே.

(இ-ள்) வியாழன், சனி, சூரியன், செவ்வாயும் கூடியிருக்கினும் அல்லது சனி, செவ்வாய்க்கு ஏழாமிடத்தில் வியாழனிருக்கில். தெற்குத்திசையிலிருக்கின்ற இலங்காபுரியிலிருந்து மகாமேருகிரிவரையிலுமுள்ள மாந்தர்கள் ஒருவருக் கொருவர் சண்டையிட்டுக் கொண்டு சங்கடப் படுவார்கள் எ-று. (167)

தானுங்கோ ளரியிற் செவ்வாய் சனியுடன் கூடி னுலும்
மானுமவ் விடத்தை விட்டு மந்தன்முன் னேகி னுலும்
வானுறு முதக மின்றி வளர்பயி ரதுவுங் குன்றி
கானுறுங் கள்ள ராலே களவுபோ மென்று சொல்லே.

(இ-ள்). சிம்மராசியிற் செவ்வாயுஞ் சனியுங் கூடியிருந்தாலும்.

அல்லது செவ்வாய்க்கு முன்சனியானவன்சென்றாலும் நாட்டில்மழை யில்லாமல் நஞ்சை புஞ்சைகளில் இட்டபயிர்கள் வாட்டமுற்றுக் கேட்டையடைந்து கோட்டைக்குள் திருடர்புகுந்து மிகுந்த பொருளை வேட்டையாடிக்கொண்டோடிப்போவார்களென்றுசொல்வாயாகஎ-று.

சேயுடன் புதனுங் கூடிற் றிரண்டதி வெள்ள மாகும்
தாயுடன் பிள்ளை சேராத் தத்தளிப் பார்க ளென்று
வேயுடை மாலுஞ் சேய்க்கு விண்மணி நடுவிற் சென்றால்
வாயுண வின்றி மாக்கள் வருத்தமுற் றிருப்பர் தாமே.

(இ-ள்) செவ்வாயும், புதனுங் கூடியிருக்கில் மிகுந்த மழை பெய்து வெள்ளமாயோடும். அதனாற்றாயும் பிள்ளையுஞ் சேராமல் ஒருவர்க்கொருவர் பிரிந்து வருத்தப் படுவார்கள். அன்றியும், சூரியனுக்கு முன்பின் புதனுஞ், செவ்வாயும் நடப்பார்களாகில் உணவுப் பொருள்க ளகப்படாமற் சனங்கள் மிகவும் வருத்தப் படுவார்கள் எ-று. (169)

பொன்னு மிரவி சேய்புதனும் புகரு மந்த னரவுறினும்
நன்னு முதக மில்லாமல் நரரும் வருத்த முற்றிடுவர்
பின்னுங் காலி கன்றுடும் பிலம தின்றி மெலிவாகும்
மன்னு மிலங்கை முதற்கயிலை வரைக்கு மனலும் பறக்குமெனே.

(இ-ள்) வியாழன், சூரியன், செவ்வாய், புதன், சுக்கிரன், சனி, இராகு இவ்வேழு கிரகங்களும். ஒரு இராசியிற் கூடியிருக்கில் நாட்டில் மழையின்றி நற்பயிரொன்றும் விளைவின்றி சனங்கள் தேட்டமின்றி உண்ணு முணவுக்குரிய பொருள்க ளொன்றும் அகப்படாமற் பலவிதத்திலும் வருத்தப்படுவதுடன் மாடுகன்று ஆடுகளும் இரையின்றி பலமில்லாமல் மேனிமெலிந்து நடக்கவுஞ் சக்தியற்றிருக்கவும் தென்னிலங்கா புரியிலிருந்து மகாமேருகிரி வரைக்கும் மிகுந்த வெப்பமுண்டாகி யதனால் அக்கினி சுவாலை வீசுமென்று சொல்வாயாக எ-று. (170)

கயலுக் கிரண்டி லிரவியுறக் கதிருக் கிரண்டி லாரல்வர
புயலு மற்ப மழைபொழியும் புவியின் மைந்தன் றனக்கிரண்டில்
வியலாந் திங்கள் புதன்வெள்ளி வெள்ளம் பொன்னன் வெகுயோகம்
செயலாய் விளையுஞ் சனிவரவே தீயு முலகென் றோதிடுமே.

(இ-ள்) மேடராசியிற் சூரியனிருக்க மேற்படி சூரியனுக் கிரண்டாமிடத்திற் செவ்வாயிருக்கில் அற்பமழை பெய்யும். செவ்வாயிருக்கு மிடத்திற் கிரண்டாமிடத்திற் சந்திரன், புதன், சுக்கிரன், இம்மூவர்களில் ஒருவரிருந்தாலும் அல்லது மேற்சொல்லிய மூவர்களிருந்தாலும் மிகுந்த மழைபெய்து பெருவெள்ளமாம். இவர்களின்றி வியாழனிருக்கில் நல்ல மழைபெய்து பயிர்கள் விளைந்து சனங்கள் வெகு சம்பத்துடன் வாழ்வார்கள். இஃதன்றி சனியிருக்கிற் சகல பயிர்களுந்தீய்ந்து மாந்தர்கள் வருத்தப்படுவார்க ளென்று சொல்வாயாக எ-று. (171)

பொன்னன் மேடந் தனிலிருக்கிற் புகலுங் கோலி னுண்டாகும்
மன்னு மவ்வாண் டதிலுதகம் வளமாய்ப் பெய்து செழிப்பாகும்
துன்னு மிடபத் திருந்திடுங்காற் றுலங்குந் தேளி னுண்டாகும்
நன்னும் வருடமட மழையாம் நாட்டிற் சுகமுண் டாகிடுமே.

(இ-ள்) வியாழன் மேடராசியி லிருக்கும்போது ஐப்பசி யென்னு மாண்டாம். அவ்வாண்டில் அதிகமாக மழைபெய்து சகல தானியங்களும் விளைந்து சனங்கள் சேமமாக வாழ்ந்திருப்பார்கள். மேற்படி வியாழன் இடபத்திலிருக்குங் காலத்தில் அதற்கு கார்த்திகை யென்னு மாண்டாம். அவ்வாண்டில் அடைமழை பெய்து நாட்டில் நஞ்சை புஞ்சைகளில் இட்டபயிர்கள் நட்டமின்றி விளைந்து மாந்தர்கள் சகல சௌக்கியங்களும் பெற்று வாழ்ந்திருப்பார்கள் எ-று. (172)

தண்டிற் கனகன் றனிருக்கத் தனுவி னுண்டாமுதகமதும்
உண்டாம் பசுவும் பாற்கறக்கு மோங்குங் கெர்ப்ப மாண்பிறக்கும்
பண்டாம் பசும்பொன் றரளமொடு பவளங் குறையு மரசருக்குள்
மண்டிற் சமரந் தொடுத்ததிக வருத்த முறுவ ரெனச்சொல்லே.

(இ-ள்) மிதுனராசியில் வியாழனிருக்குங் காலத்தில் மார்கழி யென்னுமாண்டாம். அவ்வாண்டிற் குற்றமற்ற மழைபெய்து நஞ்சை புஞ்சைகளில், நட்டது மிட்டதுமான சகல பயிர்களும் விளைவுற்றுப் பசுவினங்கள் பால் கறக்கவும் அவ்வருடத்திற் கருப்பமுற்ற பெண்டுகள், அநேகமாக ஆண்மக்களைப் பெறவும், சகல சம்பத்துடன்

வாழ்ந்திருப்பார்கள். ஆனால் அவனியில், தங்கமும், முத்தும், பவளமும், கிராக்கியாயும், அரசர்க ளொருவ ருக்கொருவர் சண்டையிட்டு வருத்தப் படுவார்களென்று சொல்வாயாக எ-று. (173)

கடகசிம்மம்பொன்னிருக்கக்கருதுந்தைமாசியிலுண்டாம்
அடவா யுதகந் தானின்றி யரிதாம் பயிர்கள் விளையாது
திடமாந் தேகந் தனில்நோயுஞ்சேரவருத்தமிகவுண்டாம்
மடவார்க் குற்ற சூலதினால் மயக்கம் வெகுவா யுற்றிடுமே.

(இ-ள்) கடகம், சிம்மம், இவ்விருராசியில் வியாழனிருக்குங் காலத்தில், தை, மாசி யென்னுமாண்டாம். இவ்விரண்டாண்டிலும் மழை பெய்யாமல் சகல தானியங்களுஞ் சொற்ப விளை வாயும் மனிதர்கள் திடகாத்திர தேகமின்றி பலவித நோய் களுண்டாக வதனால் மிகுந்த அவஸ்தை யடைந்தும் பெண்டுகள் கருப்பமுற்று அதனிற் பலவித குற்றங்களுண்டாய் மயக்கமுண்டாய் வருத்த மடைவார்கள் எ-று. (174)

கன்னி யதனிற் பொன்னனுறக் கயலி னுண்டா மவ்வாண்டில்
மின்னி யுதகம் பெய்துபயிர் மேலும் விளைவ ததிகமுறும்
நுன்னிடை மாதர் சேலை நூலது மலிவ தாகும்
நன்னயப் பருத்தி யுப்பும் நறுநெயுங் குறைவ தாமே.

(இ-ள்) கன்னியா ராசியில் வியாழனிருக்கிற் பங்குனி யென்னுமாண்டாம் அவ்வாண்டில் மழை மிகுதியாகப் பெய்து தானியங்கள் அதிகமாக விளையும். நூலும், ஆடையும் மலிவாக விற்கும். பருத்தியும், உப்பும், நல்லநெய்யும், கிராக்கியாக விற்கும் எ-று. (175)

கோலதிற் குருவும் நிற்கக் கூறுஞ்சித் திரையி னுண்டாம்
சாலவவ் வாண்டி லாலி தான்பெய்து தானி யங்கள்
காலத்தில் விளைந் தளக்குங் கணக்கது மலிந்து விற்கும்
மேலதி மலிந்த தெல்லா மிக்கவுங் குறையு மென்னே.

(இ-ள்) துலாராசியில் வியாழனிருக்கிற் சித்திரை யென்னுமாண்டாம். அவ்வாண்டிற் காலாகாலத்தில் மழைபெய்து பயிர்கள்

செழிப்பாக வளர்ந்து விளைந்து அளக்குமள வாகியத் தொகைமலிந்து
நிற்கும். அதன்மேல் வரவர மலிந்த வஸ்துக்க ளெல்லாஞ் சிறுகச்
சிறுகக் குறைந்து கொண்டே வரும் எ-று. (176)

அட்டியில் லாது தேளி லந்தண னிருப்பா னுகில்
மட்டிலா விடையி னுண்டவ் வாண்டினி லாலி யற்பம்
நட்டிடும் பயிர்கள் வாடும் நாலிலொன் றுகத் தேறும்
ஒட்டிக்கி ரெட்டி மாந்த ருணவுக்காஞ் சிலவ தாமே.

(இ-ள்) விருட்சிகராசியில் வியாழனிருப்பானுகில் வைகாசி யென்னும் ஆண்டாம். அவ்வாண்டில் மழையதிகமின்றி சொற்பமாய்ப் பெய்து புஞ்சை நஞ்சைகளில் இட்டதும் நட்டதுமான பயிர்கள் நான்கிலொரு பங்கு திரட்சியாகி விளைந்தும் மற்ற மூன்றுபங்கு வாட்டத்தையும் மடையும். அதனுல் மனிதர்கள் உணவுப் பொருட்களைச் சேகரிப்ப தற்காக ஒன்றுக் கிரண்டுபங்கு திரவியங்களைச் சிலவு செய்வார்கள் எ-று. (177)

வில்லினிற் குருவு மேவ மிதுனவாண் டவ்வாண் டத்தில்
புல்லிடு முதகம் பெய்துப் பொய்கைநீர் நிறைந்து கன்னல்
நெல்லினம் விளைந்து மாந்தர் நெறிதவ றுமல் வாழ்வர்
சொல்லிடு மரச ருக்குட் சூழ்ந்திடும் பகையென் றேதே.

(இ-ள்) தனு விராசியில் வியாழனிருக்கில் ஆனி யென்னும் ஆண்டாம். அவ்வாண்டில் மழைபெய்து வற்றிப்போனகுளம்,கிணறு, கண்வாய் முதலானதுகளில் நீர் நிறைந்து சகல தானியங்களும் விளைந்து சனங்கள் நீதி தப்பாமல் வாழ்வார்கள். ஆகினும் அரசர்களுக்குட் பகையுமுண்டு போர்க்களத்தில் யுத்தம் புரிவார்களென்று சொல்வாயாக எ-று. (178)

பொன்னனும் புல்வா யத்திற் பொருந்திடக் கடக வாண்டாம்
சொன்னவிவ் வாண்டிற் றூனுஞ் சொரியின்றி விளைவு குன்றி
தன்னலங் கருதி மாந்தர் சஞ்சலப் படுவார் மிக்க
நன்னயப் பருத்தி யெள்ளும் நலமுற மலியு மென்னே.

(இ-ள்) மகரராசியில் வியாழனிருக்கில் ஆடியென்னும் ஆண்டாம். அவ்வாண்டில் மழைபெய்யாமலும் நஞ்சைபுஞ்சைகளில் இட்ட பயிர்கள் விளையாமலும், பிறர்களுக்கு நன்மை செய்வதைவிட்டு தன்னைப் பேணிக்கொள்ளுதலே கடனென நினைத்துச் சஞ்சலத்துடன் வாழ்வார்கள். ஆனால் பருத்தியும் எள்ளும் விளைந்து மலிவாகவிற்கு மென்பாயாக எ-று. (179)

கும்பத்திற் குருவுந் தோன்றக் கோளரி யாண்டவ் வாண்டில்
தெம்புட னுதகம் பெய்து தீம்பயிர் விளைவுண் டாகும்
வம்பதுஞ் செய்வர் மாந்தர் மாடுகன் றுடு மேய
பம்பிடும் புல்லி னங்கள் பலிகிடு மென்று சொல்லே.

(இ-ள்) கும்பராசியில் வியாழனிருக்கில் ஆவணி யென்னும் ஆண்டாம். அவ்வாண்டில் அதிகமாக மழைபெய்து புசிக்கும்படியான தானியங்கள் பொலிவுடன் விளைந்து மாடு கன்றுகள் மேய்வதற்கு புற்பூண்டுகள் மலிந்தும் மனிதர்கள் ஒருவருக்கொருவர் பகை செய்து கொள்வார்களென்று சொல்வாயாக எ-று. (180)

சேலதிற் குருவும் நிற்கத்தெரிவையாண்டவ்வாண்டத்திற்
சாலவுந் தாரை யின்றித் தானிய விளைவு குன்றிச்
சீலமாங் குதிரை யானை செப்பிடுங் கன்று காலி
காலத்தின் கொடுமை தன்னாற் கடும்பசி மிகவுண் டாமே.

(இ-ள்) மீனராசியில் வியாழனிருக்கில் புரட்டாசி யென்னும் ஆண்டாம் அவ்வாண்டில் மிகுதியான மழை பெய்யாமல் தானியங்களொன்றும் விளையாது. ஆனதினால் குதிரை, யானை, மாடு, கன்றுகள் முதலிய நாற்காற் சீவன்களும், மனிதர்களும், அவ்வருடத்திலேற்படுங் கொடிய பஞ்சத்தினால் பசிப்பிணியை மாற்றிக்கொள்ளும் மார்க்கமின்றி அவதிப்படும் படியான நிலமையுண்டாம் எ-று. (181)

புகருந் தகரு மெருதுதண்டு பொருந்த நண்டிற் றுரையுறுந்
தகமை யரிபெண் ணுதகமில்லை தகுந்தேட் கோனு மிகுவெள்ளம்
புகலுஞ் சிலைமான் பெருந்தூற்றற் பேசுங் கும்ப மீனுதகம்
அகமுஞ் செழிக்கப் பயிர்விளையு மதனு லதிகச் சுகமாமே.

(இ-ள்) சுக்கிரன், மேடம், இடபம், மிதுனம், கடகத்திலிருக்கில் நல்லமழை பெய்யும். மேற்படி சுக்கிரன், சிம்மங், கன்னியிலிருக்கில் மழை பெய்யாமற் பயிர்களெல்லாங் குன்றிப்போகும். மேற்கூறிய சுக்கிரன், துலாம், விருட்சிகத்தி லிருக்கில் அதிக மழை பெய்து வெள்ளமாகும். அன்றியுஞ் சுக்கிரன், தனுசு, மகரத்திலிருக்கில் பெருந்தூற்றலாகத் தூறிக்கொண்டிருக்கும். மேலுஞ் சுக்கிரன் கும்பம் மீனத்திலிருக்கில் நல்லமழை பெய்து சகலதானியங்களும் விளைந்து மாந்தர்கள் அதிகச்சுகம் பெற்று வாழ்ந்திருப்பார்கள் எ-று. (182)

பெரிதா மிவுளி காரியுறப் பெய்யுந் தாரை மன்கலகம்
உரிதாங் கங்குல் விளைபொருள்க ளுண்டா மாரல் முதல்மூன்றுங்
கரியோன் நிற்கின் மனுமாய்ந்து கருப்பு மிகுமே யாதிரையிற்
சொரியுண் டதிகம் புனர்தமெனிற் றுணையும் விளைவு மளவாமே.

(இ-ள்) அசுபதி நட்சத்திரத்திற் சனியானவ னிருப்பானுகில் மழைபெய்து சகலதானியங்களும் விளையும். அரசர்களி லொருவருக்கொருவர் சண்டையுண்டாகும். பரணி நட்சத்திரத்தில் சனியானவ னிருக்கிற் சகல பயிருமோங்கி விளையும். கார்த்திகை, உரோகணி, மிருகசீரிடம், இம்மூன்று நட்சத்திரங்களில் சனியானவ னிருக்கில் பஞ்சமுண்டாகி அதனுல் உணவுப்பொருட் களகப்படாமல் மனிதர்கள் மடிந்துபோவார்கள். திருவாதிரை நட்சத்திரத்திற் சனியானவ னிருக்கில் தேசமெங்கும் மழைபெய்து பயிர்கள் விளையும். புநர்பூச நட்சத்திரத்திற் சனியானவ னிருக்கில் ஒவ்வொருவருக்கும் புத்திர பாக்கியமும் பயிர்விளைவுஞ் சமமாயிருக்கும் எ-று. (183)

அளவாங் கொடிறிற் காரியுறி லற்ப விளைவு கடைபலுகும்
வளவி லரவு மகம்பூரம் மாரியற்பம் விலேகு றையுங்
களவாங் காரி யுத்திரஞ்சீ கரஞ்சற் றெனினு மெட்பயிர்கள்
விளையு மத்த முதல்நான்கும் வெகுதா னியங்க ளுண்டாமே.

(இ-ள்) பூசநட்சத்திரத்திற் சனியானவ னிருக்கில் பிந்தின பயிர்க ளற்பமாகவிளையும். ஆயிலியம், மகம், பூரம், இம்மூன்று நட்

சத்திரங்களிற் சனியானவனிருக்கில் அற்ப மழைபெய்து விளையும் பயிர்கள் விலைகுறைவாக விற்கும். உத்திரநட்சத்திரதிற் சனியானவனிருக்கில் மழை சொற்பமாகப் பெய்யினும் எள்ளு முதலிய சகல தானியங்களும் விளையும். அத்தம், சித்திரை, விசாகம், இந்நான்கு நட்சத்திரங்களிற் சனியானவனிருக்கிற் சகலதானியங்களும் விளைவுண்டாம் எ-று. (184)

நீலன் பனைமா மரமேறில் நிலமும் விளைவுண் டிறைக் கழிவாம்
சாலக் கேட்டை முதலைந்திற் சாரப் பசிநோய் கலக்கமுறும்
மேலு மவிட்ட முதன்மூன்றும் வெள்ளம் பெருகி விளைவுண்டாம்
தாலமறிவ னுறப் பசியாஞ் சாற்றுஞ் சேய்க்கு மிப்பலனே.

(இ-ள்) அனுசநட்சத்திரத்திற் சனியானவனிருக்கில் நஞ்சை புஞ்சைகளில் இட்டபயிர்கள் நன்றாய்விளையும் அரசர்களுக்குட்சண்டையுண்டாய் மாண்டுபோவார்கள். கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், இந்தவைந்து நட்சத்திரங்களிற் சனியானவனிருக்கிற் சுத்தமாய் மழை பெய்யாது பயிர்களெல்லாந் தீய்ந்து பசிநோயால் மெலிந்து சனங்கள் நசித்துப் போவார்கள். அவிட்டம், சதயம், பூரட்டாதி, இம்மூன்று நட்சத்திரங்களிற் சனியானவனிருக்கில் மழை பெய்து தடாகங்கள் முதலியவைகள் நீர்நிறைந்து சகலபயிர்களும் விளைந்து சனங்கள் சௌக்கியமாக வாழ்ந்திருப்பார்கள். உத்திரட்டாதி, இரேவதி இவ்விரண்டு நட்சத்திரங்களிற் சனியானவனிருக்கில்தேசமெங்கும் மழையின்றி விளைவு குன்றி சனங்கள் பசியாலும், நோய்களாலும், வருத்தமடைவார்கள். இவ்விதஞ் செவ்வாயானவன் இருபத்தேழு நட்சத்திரங்களில் நிற்கும் நிலைகண்டு பலன் சொல்ல வேண்டும் எ-று. (185)

படியின் மேதை குடமாதி பகர்நா லிரவி தனக்குமுன்
நெடிய தண்டு முதல்நான்கும் நெருங்கிச் சண்டன் பின்செல்வன்
கடியதூக்கு முதல் நான்குங் கதிரைச் சேர்ந்து நடந்திடுவன்
கொடிதா மாறிற் கதிர்புகருங் கூடிற் பஞ்சக் குறியாமே.

(இ-ள்) இப்பூமியின்கண் கும்பம், மீனம், மேடம், இடபம், இந்நான்கு ராசியிலும் புதனானவன் சூரியனுக்கு முன்னேபோவான். மிது

னம், கடகம், சிம்மம், கன்னி, இந்நான்கு ராசியும் புதனுனவன் சூரியனுக்குப்பின்னுகநடப்பன் துலாம், விருட்சிகம், தனுசு, மகரம், இந்நான்கிராசியிலும் புதனுனவன் சூரியனுடன்சேர்ந்து போவான். இவ்விதங்கிரமந்தப்பாமற்போவானுகிற் புவியிற் சகல சம்பிரமமாகஜனங்கள் வாழ்வார்கள். இதற்கு மாறுகசூரியனுக்குப்புதனுனவன். முன்போகிறகாலத்தில் பின்னும், பின்போகிறகாலத்தில் முன்னும், சேர்ந்துபோகிறகாலத்திற் பிரிந்தும், ஏட்டிக்குப் போட்டியாகச் செல்வானுனும். இவ்வித மாறுபட்டு செல்லுங்காலத்திற் சூரியனுடன் சுக்கிரன் கூடுவானுகில் அதுவே கொடிய பஞ்சத்தைக் காட்டுங் கருவியாகும் எ-று. (186)

இந்தரி முடவ னிருவருங்கூடி யிருக்கினு மலதுநற் சிகியும்
மந்தனுஞ் சேர வன்றிமாகுருவு மதிப்பகை யுடன் கலந்திடினும்
பந்தமாங் கதிரின் பகையுடனுறினும் பயிர்விளை வற்பம தாகும்
முந்துதண் டுலத்தைப் புசித்தகமகிழ்வர் மூதறிவுள்ளமாந் தருமே.

(இ-ள்) இராகுஞ்சனியுங்கூடியிருந்தாலும் அல்லது, கேதுஞ்சனியுங்கூடியிருந்தாலும். அவ்வாறின்றி, குருவுமிராகுங்கூடியிருந்தாலும். அப்படியில்லாமற் குருவுங்கேதுங்கூடியிருந்தாலும். சகலதானியங்களுஞ்சொற்பமாகவிளையும், அதனுல் முன்வருடத்தில் விளைந்த தானியங்களில் மீதமுள்ளவற்றை மாந்தர்களனைவருஞ்சாப்பிட்டுமகிழ்வாக வாழ்ந்திருப்பார்கள் எ-று. (187)

## வேறு.

இவ்வித மிருப்போர் தங்களுக் கேழி லிருக்கமற் றிருவரும் பத்திற்
செவ்வையாய்க்கூடியிருக்க வெட்கையதாஞ் சேலரிகோ னுடன்றேளும்
ஓவ்விய விடையுங் கும்பமோ டாறி லுகந்துமுன் னவர்க ளுற்றிடினும்
பவ்விய பூமன் கதிரவனேடு பண்டவ ரிருக்கச் சொல்வேனே.

(இ-ள்) இந்தப்படியாக மேற்சொல்லிய கிரகங்களிருந்தாலும், அல்லது ஒருவருக்கொருவர் ஏழுபத்தில் மாறுதலாக இருவர்களிருக்கில் உலகத்திலுள்ளவர்கள் தாங்கமுடியாதவெப்பமுண்டாகும். அன்றியும், மீனம், சிம்மம், துலாம், விருட்சிகம், இடபம், கும்பம், இந்த ஆறுராசிகளில் எந்தராசியிலாவது. சூரியன், செவ்வாய், வியாழன்,

இந்நால்வர்களுடன், இராகுவாவது கேதாவது கூடியிருக்கில் பலன் சொல்வேன் எ-று. (188)

சொல்லிடுங் குடிக ளிருந்தவூ ரெங்குஞ் சூழ்ந்திடும் நாய்நரி யலகை
வல்லதோ ரோம குண்டமெக் கியங்கள் வளர்ப்பது நின்றிடு மன்றி
நல்லதோர் நாடுங் காடுமே டாகுங் காடுமே டதுவும்நா டாகும்
புல்கிய மனிதர் பிரிந்து கூடிடுவர் போதஞ்சற் றிலையெனப் புகலே.

(இ-ள்) சொல்லுதற்கரிய குடிசனங்கள் வசிக்கும்படியான ஊர்களெங்கும் ஓனாய் நரிகள், பேய்கள் சூழ்ந்துகொள்ளும். எக்கியங்கள் செய்வதற்கு முதற்கருவியாகிய ஓமகுண்டங்கள் வளர்ப்பதும் நின்றுவிடும். நல்லநகரங்களிருந்தவிடமெல்லாம் பள்ளமும், மேடும், பாலைநிலமுமாம், பாலைவனம்பள்ளம் படுகுழிகளாயிருந்த விடமெல்லாம் நாடுநகரங்களாம், சேர்ந்திருந்தமனிதர்கள் பிரிந்துபோய் சின்னாட் சென்றபின் கூடுவார்கள். அக்காலத்தில் மனிதர்கட்கு ஞானஞ்சிறிதேனு மிராதென்று சொல்வாயாக எ-று. (189)

போற்றிடுங் குருவுங் காரியு மரவும் பூமனு மொன்றுசேர்ந் திடினும்
சாற்றிய திவ்வா றன்றிப்பொன்ன னுக்குத்தானுமேழிடத்திருந்தாலும்
ஏற்றிய காரி குசனுடன் கூடி யிருக்கினு மலதர வுறினும்
நாற்றிசை யதிலுந் தாரைபெய் யாது நலிகுவர் மாந்தரென் றுரையே.

(இ-ள்) வியாழன், சனி, செவ்வாய், இராகு, அல்லது கேது, இவர்களொன்றுசேர்ந்திருந்தாலும். அவ்வாறின்றி வியாழனுக்கேழாமிடத்தில் மேற்சொல்லிய கிரகங்களிருந்தாலும். அஃதன்றி செவ்வாயுடன் இராகாவது, கேதாவது, கூடியிருந்தாலும். அன்றியும், செவ்வாயுடன் சனிசேர்ந்திருந்தாலும் நாலாபக்கத்திலும் மழைபெய்யாமல், சனங்கள் நட்டமடைவார்கள் எ-று. (190)

கேட்டிடு மீனந் தேளினந் நியத்துங் கிளர்விடை மத்திபந் தனிலும்
நாட்டிடுஞ் சிம்மத் தாதியிற் சனியும் நாட்டினி லுதகம தின்றிக்
காட்டினில் விதைத்த பயிர்விளை யாது கடும்பசி நோயதால் வாடி
தேட்டினை யிழந்துசமர்க்களத் துற்றுச்சிவபதஞ்சேர்வரென் றுரையே.

(இ-ள்) மீனவிருட்சிகராசிகளின் கடாசிப்பங்கிலும் இடபராசி

யின், மத்திமப்பங்கிலும் சிம்மராசியின் முதற்பங்கிலும், சனியானவ னிருக்கில் உலகத்தில் நஞ்சை புஞ்சைகளிலிட்டபயிர்கள் விளையாமற் சனங்கள் கடும்பசி தாளாமற்றங்கள் சம்பாத்தியங்களையுமிழந்து அர சர்களுக்குதவியாய் அமர்க்களத்திற்சென்று அரும்போர்புரிந்து ஆவி யிழப்பரெனச் சொல்வாயாக. எ-று. (191)

இடபந்தேள் தனுசு மீன மித்துடன் சிம்மந் தன்னில்
வடகமா மந்தன் புந்தி வசித்துவக் கரிப்பா ருகில்
திடமுள வரசர்க் கீனஞ் செப்பிடும் வெள்ளிக் கேழா
மிடந்தனிற் குருவி ருக்கி லியர்க்கையா மழைபெய் யாதே.

(இ-ள்) இடபம், விருட்சிகம், தனுசு, மீனம், சிம்மம். இவ் வைந்து ராசிகளில், சனியும், புதனும், இருந்து வக்கரிப்பார்களாகில் அவனியைப் பரிபாலிக்கும் அரசர்களுக்கு அவகேடுண்டாம். அன்றி யும், சுக்கிரனுக்கேழா மிடத்தில் வியாழனிருக்கில் இயற்கையாகவே பூமியில் மழை பெய்யாது எ-று. (192)

கதிரவன் றனக்கு முன்பின் கவிபுதன் ருனுஞ் செல்லத்
ததியினி லிரவி முன்னஞ் சனிசெவ்வாய் நடப்பா ராகில்
மதித்திடு முதக மின்றி மாபயிர் விளைவு குன்றி
கதித்திடு மாந்தர் பஞ்சக் கலக்கமுற் றிடுவ ரென்னே.

(இ-ள்) சூரியனுக்கு முன்னும் பின்னும் சுக்கிரனும் புதனுஞ் சென்றாலும். அல்லது சூரியனுக்குமுன்பு சனியுஞ் செவ்வாயும் போனாலும். உலகம் மதிக்கும்படியான மழைபெய்யாமல் பயிர்க ளொன்றும் விளையாமல் உண்ணும் உணவுக்குங் குடிக்குந் தண்ணீ ருக்கும் அவதிப்படுவார்க ளென்று சொல்வாயாக எ-று. (193)

நோய்முகன் றனக்கு மூன்று நவலும்பன் னொன்றிற் ருனும்
வாய்மைசேர் குருவுஞ் சுங்கன் வந்திட வரச ருக்கும்
தூய்மையா மாந்த ருக்குந் துன்பமாங் காலி கட்குந்
தோய்ந்திடும் பீடை யன்றிச் சொல்லிடும் பஞ்ச மென்றே.

(இ-ள்) சனிக்கு மூன்று, அல்லது பதினொன்றுமிடத்திற் குரு

வும், சுக்கிரனு மிருப்பார்களாகில். இராசாக்களுக்கும், சனங்களுக்கும், ஆடுமாடுகளுக்கும் பீடையும் ஊண்பொருள் அகப்படாத துக்கமும், உண்டாமென்று சொல்வாயாக எ-று. (194)

பொன்னனுங்காரிக்கைந்திற்பொருந்திடுங்காலந் தன்னில்
நன்னய வுயிர்கட் கெல்லாம் நலமிலாத் தீதுண் டாகும்
சொன்னதோர் கிரக மெல்லாஞ் சூரியன் றன்னைப்பார்க்கில்
இன்னில மதனி லோராண் டெய்திடா துதக மென்னே.

(இ-ள்) சனிக்கு, ஐந்தாமிடத்தில் வியாழனிருக்குங் காலத்தில் பூமியிலுள்ள சனங்களுக்கும் நாற்கால் மிருகங்களுக்குந் தீங்குண்டாகும். அன்றியும். எல்லாக் கிரகங்களும் சூரியனைப் பார்ப்பார்களாகில் ஒருவருடகாலம் மழை பெய்யாதென்று சொல்வாயாக எ-று. (195)

என்றிடக் கதிர்க்கு முன்சே யேகச்சுங் கனும்பின் செல்ல
நன்றிலை யுதகம் பின்கால் நாடிடும் பயிர்கள் வாடும்
அன்றிவெய் யவர்க்கு முன்ன மருணனும் நடப்பா னாகில்
வென்றியாம் பஞ்சு மிக்க விலையதா மென்ன லாமே.

(இ-ள்) சூரியனுக்கு முன், செவ்வாயானவன் செல்ல சூரியனுக்குப் பின்னாகச் சுக்கிரனானவன் போகில் நன்மையில்லை. முன் மழை பெய்யாமற் பின் மழை பெய்யும். அதனால் முன்னாடியிட்ட பயிர்களெல்லாம் வாடும். அல்லாமலும், சூரியனுக்கு முன்பாக புதனானவன் போவானாகில் பஞ்சு விலை யேற்றமாக விற்குமென்று சொல்வாயாக எ-று. (196)

தண்டுபெண் ணதனிற் சேயுஞ் சஞ்சரித் திடுங்கா லத்தில்
பண்டக விலையும் பாதிப் பகர்கவி யிடபங்கோலைக்
கண்டிட மலியுங் கவிதிரமதனைக் கலந்திட விலையதிகமதாம்
விண்டிடும் விபரங் கண்டு விளம்புதல் மேன்மை யாமே.

(இ-ள்) மிதுனம்,கன்னியாராசிகளில்செவ்வாயானவனிருக்குங் காலத்தில் அகவிலை யதிகமலிவின்றி சமாசமாகவிற்கும். சுக்கிரனானவன் இடபம், துலாம், இவ்விருராசிகளி லிருக்குங்காலத்தில்.

அகவிலை மலிவாகவிற்கும். அன்றியும், சுக்கிரனானவன் மேற்சொல்லா தகிர ராசியாகிய சிம்மம், விருட்சிகம், கும்பம், இம்மூன்று இராசியி லிருக்குங்காலத்தில் அகவிலை குறைந்துவிற்கும். ஆதலால் இவ் விபரங்களை நன்றாயாலோசித்துச் சொல்லுகிறவர்களுக்கு அதிக மேன்மையுண்டாம் எ-று. (197)

நலமுறும் புல்வாய் தேளில் ரவிபுகுங் காலந் தன்னில்
பிலமதாய்த் தூற்றி லாலி பெய்யுமம் மதியின் மட்டும்
சொலக்கலை யம்மா வாசி தோன்றுநாட் கதிரே யாகில்
உலகிலவ் வாண்டு விற்கு முணவடுத் திரட்டி யாமே.

(இ-ள்) மகரம், விருட்சிகம், இவ்விருராசிகளிற் சூரியனானவன் பிரவேசிக்குங்காலத்தில், தூற்றலானது தூற்றுமாகில் அந்தமாதத் தில் அதிகமாகமழைபெய்யும். தைமாசத்தில் வருகிற அமாவாசை யானது ஆதிவாரத்தில் வருமாகில் அவ்வருடத்தில்தானியங்கள் விற் கும் விலைக்கு ஒருபங்கு அதிகயேற்றமாக விற்கும் எ-று. (198)

ஓங்கிய மதிவா ரத்தி லுற்றிடி லொன்றிற் பாதி
நோங்கிடுஞ் சேயின் வாரம் நோக்கொன்று மூன்று நான்காம்
பாங்குள புந்தி வாரம் பண்டுள விலைய தாகும்
சோங்குள பொன்னின் வாரஞ் சொல்லிடு மொன்று காலே.

(இ-ள்) மேற்சொல்லிய தை யமாவாசையானது திங்கட்கிழமை வரில் அவ்வருடத்தில் விற்கும் விலைக்கு அடுத்த வருடத்தில் ஒன் றுக்குப்பாதியாகவிற்கும். செவ்வாய்க்கிழமைவரில் ஒன்றுக்குமூன்று நான்கு பங்கு உயர்வாகவிற்கும். புதன்கிழமை வரில் அவ்வருடத் தில் விற்கும் விலைக்கு அதற்கடுத்தவருடத்திலும் விற்கும். வியாழக் கிழமை வரில் அவ்வருடத்தில் விற்கும் விலைக்கு ஒன்றுக்குக் காற்பங்காக மலிந்து விற்கும் எ-று. (199)

காலதாம் வெள்ளி வாரங் கருதுமொன் றுக்கு முக்காற்
சாலவுங் காரி வாரந் தனக்குமொன் றெட்ட தாகும்
கோலஞ்சேய் பொன்னன் கூடிடச் சண்டனோடு
மேலும் நான்கரையாமாதம் விட்டு வக்கரமதாமே.

(இ-ள்) வெள்ளிக்கிழமையன்று தைமாச அமாவாசை வரில் அவ்வாண்டில் விற்கும் விலைக்கு அடுத்தவருடத்தில் ஒன்றுக்கு முக்காலாக விற்கும். சனிக்கிழமையில் வரில் அவ்வாண்டில் விற்கும் விலைக்கு அடுத்தவருடத்தில் ஒன்றுக் கெட்டுபங்குயர்வாக விற்கும். செவ்வாய், சனி, வியாழன், இம்மூவரையுஞ்சூரியன் வந்து கூடியகாலத்திற்குமேல் நாலரைமாதஞ்சென்றால் மேற்படிகிரகங்களுக்கு வக்கரகதியுண்டாகும் எ-று. (200)

வக்கரித் திட்ட நான்கா மதிதனில் நிவர்த்தியாகும்
தக்கதோர் விடையரி தேளுந் தனுவுஞ்சே லிவைவயி னீற்றில்
வக்கிரன் காரி நின்று வக்கரித் திடவி ராசர்
மிக்கவும் போர் புரிந்து மெலிவடைந் திடுவ ரென்னே.

(இ-ள்) மேற்சொல்லியவாறு வக்கர கதியடைந்த கிரகங்கள் நான்கு மாதஞ்சென்றால் மேற்படி வக்கரகதி நீங்கும். இஃதன்றியும் இடபம், சிம்மம், விருட்சிகம், தனுசு, மீனம், இவ்வைந்திராசிகளின் கடாசியில் செவ்வாயும், சனியுமிருந்து வக்கரிக்கில் அரசர்களுக்குள் மிகவும் கடுமையாகியசண்டையுண்டாகிஇளைத்துப்போவார்களென்று சொல்வாயாக எ-று. (201)

நன்றுமா மதிக்குப் புந்தி நற்குரு வெள்ளி காரி
அன்றமர் தோர்க்கு மாகி லரசர்க ளாணை செல்லும்
நின்றசேய் தனக்குப் புந்தி நிலவதுந் தோர்க்கு மாகில்
கன்றிடு மமைச்சர் பீடை கனகனுக் கதிபசி யென்னே.

(இ-ள்) சந்திரனுக்கு புதன், வியாழன், சுக்கிரன், சனி, இவர்கள் தோற்றுப்போவார்களாகில். அரசர்கள் நீதிதவறாமல் செங்கோல் நடாத்துவார்கள். செவ்வாய்க்கு, புதன், சந்திரன், தோற்றுப்போவார்களாகில், மந்திரிகளுக்குப்பீடையுண்டாம். மேற்படி செவ்வாய்க்கு வியாழன், தோற்பானாகில், சனங்கள் பசியினால் வருந்துவார்கள் எ-று. (202)

சுக்கிரன் றோற்கிற் சண்டைச் சுன்னவன் றோற்கிற் றுட்ட
ருக்கிர மடங்கிப் போவ ருரைந்திடும் புதன் றனக்கு
வக்கிரன் சசியுங் காரி வலிகெடில் மழையும் பெய்யும்
தக்கநன் மதியந் தோற்கிற் றூரணி பவர்க்குத் தீதே.

(இ-ள்) மேற்சொல்லிய செவ்வாய்க்கு, சுக்கிரன்தோற்றுப்போகிற்சண்டையாம். சனி தோற்றுப்போகில் துட்டர்கள் கெட்டுப்போ

வார்கள். புதனுக்கு, செவ்வாய், சந்திரன், சனி, தோற்றுப்போவாரா கில் உலகில் மழைபெய்து சுபிட்சமாயிருக்கும். ஆகினும் புட்டமாலை யைத்தரித்த அரசர்களுக்குப்பீடையுண்டாம் எ-று. (203)

புந்தியந் தணனை வெல்லிற் பொருந்திய வுதக மில்லை
பந்தமாங் கவியை வென்றாற் பாவையர் விருப்ப முண்டாம்
சுந்தரக் கவிக்குச் சேய்மால் சுன்னனுந் தோற்பா ராகில்
வந்ததி யுதகம் பெய்யு மாமதிக் கரசர் தீதே.

(இ-ள்) புதனுக்கு, வியாழன் தோற்றுப்போவானாகில் உலகத்தில் மழைபெய்யாது. சுக்கிரன் தோற்பானாகில், புருடர்கள் பெண்டுகள்மீது விருப்பமாயிருப்பார்கள். சுக்கிரனுக்கு, செவ்வாய், புதன், சனி, தோற்றுப்போவார்களாகில் மழையதிகமாகப்பெய்யும். சந்திரன் தோற்றுப்போவானாகில் அரசர்களுக்குத்தீதுண்டாம்எ-று. (204)

நன்றல குருவுந் தோர்க்கில் நாடிடும் பசிநோய் தன்னால்
பொன்றுவர் மாந்தர் தானும் புகழ்மதி சனிக்குத் தோர்க்கில்
வென்றதோர் விளைவ தில்லைவெள்ளியே லுதக மில்லை
நின்றதோர் புதன்சேய் தோர்க்கில் நீண்டிடுஞ் சமருண் டாமே.

(இ-ள்) மேற்சொல்லிய சுக்கிரனுக்கு வியாழன் தோற்றுப்போவானாகில் சனங்கள் பசியினால் வருத்தப்படுவார்கள். சனிக்கு, சந்திரன் றோற்கில் பயிர்கள் விளையாது. சுக்கிரன்தோற்கில் மழை பெய்யாது. புதனுஞ் செவ்வாயுந்தோற்றுப் போவார்களாகில் கொடிய சண்டையுண்டாம் எ-று. (205)

அரிமுதற் சுறாவின் மட்டு மங்குநின் றிருந்த கோட்கள்
வருங்கிர கத்தை வெல்லும் வளர்குடந் தொட்டு நண்டு
வரையிலு மிருந்த கோளை வந்திடுங் கோட்கள் வெல்லும்
விரைவுறும் பலன றிந்து விளம்புதல் மிகவும் நன்றே.

(இ-ள்) சிம்மம், கன்னி, துலாம், விருட்சிகம், தனுசு, மகரம், இந்தஆறு ராசிகளில் இருக்குங்கிரகங்கள் வருங்கிரகத்தை வெற்றி கொள்ளும். கும்பம், மீனம், மேடம், இடபம், மிதுனம், கடகம், இந்தஆறு ராசிகளில் இருக்குங்கிரகங்களை வருங்கிரகங்கள் வெற்றி கொள்ளும். இவ்விதமேற்படும் கிரகங்களின் வெற்றியினால் வரும்பலன்களை யறிந்து சொல்லுதலே மிகவும்நன்மையாம் சேமமடைவார்கள் மங்களம். எ-று. (206)

மழைக்குறி சாஸ்திரம்

முற்றிற்று.

